IBC தமிழ்

# ஒரு மேடை




# கலைஞர்கள்

## ஆடல் பாடல் நகைச்சுவை நாடகம்






PROUDLY PRESENTS

# IBC தமிழா

TORONTO 2019

POWERED BY
IDEAL.VENTURES

SPONSORED BY




CO-SPONSORED BY

MELENI DAVID
PERSONAL INJURY LAWYERS




weddingman
Sri Lankan Community Matrimony

SATURDAY
**JUNE 29TH AT 5PM**
**SCOTIABANK ARENA**

**TICKETS STARTING FROM $25**




தமிழ் இனத்தின் ஒப்பற்ற மேடை...
எமது கலைஞர்களின் கலை மிடுக்கு!

IBC தமிழா
TORONTO 2019

IDEAL VENTURES









# AUTHORIZED TICKET SALE LOCATIONS

## SCARBOROUGH




**IBC Tamil Office**
21 Golden Gate Court
416.477.2550



**Gunam Super Market**
1145 Morvningside Ave.
416.283.9998




**New Spiceland – Steeles**
6065 Steeles E.
416.335.3030



**Eraa CD Market – Eglinton**
2625 Eglinton Ave E.
416.269.2622



**Eraa Super Market – Finch**
5930 Finch Ave E.
416.292.2622




**New Ocean Super Market**
5635 Finch Ave E.
416.292.0122



**New Spiceland – Sheppard**
5790 Sheppard Ave E.
416.292.9769




**Annam Jewellers**
208 Markham Road
416.265.9166



**Cash Point**
3852 Finch Ave, Unit G03
416.284.7000




**Amman's Jewellers**
3341 Markham Rd #103
416.293.7287



**MJS Gold House**
5215 Finch Ave E, Unit 113
416.299.1630

## BRAMPTON




**Golumbia Video**
144 Kennedy Rd S.
905.456.8433



**Asian Cash and Carry**
8917 The Gore Rd.
905.794.0015




**Leela Supermarket**
263 Queen St E.
905.453.3522

## AJAX



**New Spiceland – Ajax**
1801 Harwood Ave N.
905.426.1114

## ETOBICOKE



**TNEXT COMMUNICATION INC.**
155 Rexdale Blvd, Suite 502
416.477.8181




**UTHAYA'S SUPERMARKET VIDEO SECTION**
5010 Steeles Ave W, Etobicoke
416.742.1425




***Scotiabank Arena*** விற்கு செல்லும்
வழிமுறைகள் பற்றிய தகவலுக்கு கடைசிப்பக்கத்தை பார்க்கவும்.

# IBC தமிழ்
பத்திரிகை



June 2019 | திருவள்ளுவர் ஆண்டு 2050 ஆனி | இதழ் 06 | பிரசுரம் : கனடா | இலவசப்பிரதி



# மீண்டும் அரசியல் குழப்பம்!

## நாடாளுமன்றத்துடன் மைத்திரி அதிகார இழுபறி!!

இலங்கையில் கடந்த ஏப்ரல் மாதம் 21 ஆந்திகதி இடம்பெற்ற தொடர் தற்கொலைத் தாக்குதல்கள் தொடர்பாக சிறிலங்கா நாடாளுமன்றத் தெரிவுக்குழு நடத்திவரும் விசாரணைகளை மையப்படுத்தி மீண்டும் ஒரு அதிகார இழுபறி உருவாகியுள்ளது.

நாடாளுமன்றத் தெரிவுக்குழுவில் தோன்றிய சிறிலங்காவின் முன்னாள் பாதுகாப்புச்செயலாளர் சிறிலங்காவின் தேசியப் புலனாய்வுத் துறைத்தலைவர் மற்றும் கட்டாய விடுமுறையில் அனுப்பப்பட்ட காவல்துறை மா அதிபர் ஆகியோர் தத்தமது வாக்குமூலங்களை வழங்கியிருந்தனர்.



இவர்கள் வழங்கிய வாக்கு மூலங்கள் யாவும் உயிர்த்த ஞாயிறு குண்டுத் தாக்குதல்களை தடுக்கத் தவறியமைக்கு சிறிலங்கா அரசதலைவர் மைத்திரிபால சிறிசேனவின் செயற்பாடுகளே முக்கியமாக அமைந்தன என்ற உண்மையை பகிரங்கப்படுத்தின.

இதனால் அதிர்ச்சியடைந்த மைத்திரிபால சிறிசேனா, தனக்கு எதிராக செல்லும் நாடாளுமன்றத் தெரிவுக்குழு விசாரணைகளை இடைநிறுத்த கடுமையாக முயற்சிசெய்து வருகிறார். இதற்காக கடந்த 7 ஆந்திகதி வெள்ளியன்று அவசரமாக அமைச்சரவையை கூட்டி இதற்குரிய பரிந்துரையை முன்வைத்தார்.

அதேபோல சிறிலங்கா பாதுகாப்புதுறையுடன் தொடர்புடைய அதிகாரிகள் தெரிவுக்குழுவில் தோன்றி சாட்சியம் அளிக்கக்கூடாது எனவும் வலியுறுத்தினார். ஆனால் அரசதலைவரின் இந்த முடிவுகளை சிறிலங்காவின் நாடாளுமன்ற சபாநாயகர் கருஜயசூரிய ஏற்கமறுத்துள்ளார்.

அத்துடன் அரச அதிகாரிகளுக்கு நாடாளுமன்றத் தெரிவுக்குழு அழைப்பு விடுத்தால் அவ்வாறன அதிகாரிகள் அதன் முன்னிலையில் தோன்ற கடமைப்பட்டுள்ளதாகவும் அவர் அழுத்தமாகக் கூறியுள்ளார்.

இதற்கும் மேலதிகமாக நாடாளுமன்றத்

தொடர்ச்சி 4 ஆம் பக்கம்...

## IBC தமிழ் வானொலி அகவை 22

பிரிட்டன் தலைநகர் இலண்டனில் 1997 ஜூன் 9 அன்று ஐபிசி தமிழ் ஒலி ஊடகம் ஆரம்பமானது. 2014 முதல் புதுப்பொலிவு பெற்று வளர்ச்சி கண்டு வரும் ஐபிசி தமிழ் காட்சி ஊடகமாக 2015ல் பரிணாம் பெற்றது.

தொடர்ந்து இணையம், பத்திரிகை என யாவற்றிலும் ஊடகப் பயணம் புரிவதற்கு ஆதார சுருதியாக விளங்கியது ஐபிசி தமிழ் வானொலி.

# சிறிலங்கா புலனாய்வுத்துறை தலைவர் பதவி விலகல்!

## விலகினாரா? விலக்கப்பட்டாரா?

சிறிலங்காவின் தேசிய புலனாய்வுத் தலைவர் சிரிர மென்டிஸ், தனது பதவியில் இருந்து 8 ஆந்திகதி விலகியுள்ளார்.

உயிர்த்தஞாயிறு குண்டுத்தாக்குதல்கள் தொடர்பாக சிறிலங்கா நாடாளுமன்ற தெரிவுக்குழு நடத்திவரும் விசாரணைகளின் முதல்நாள் அமர்வில் நாட்டின் தேசிய புலனாய்வுத் தலைவர் என்ற அடிப்படையில் சிரிர மென்டிஸ், சில பாரதூரமான விடயங்களை கக்கியிருந்தார்.



உயிர்த்த ஞாயிறு தாக்குதல்இடம்பெறுவதற்கு முன்னர், இரண்டு மாதங்களுக்கு சிறிலங்காவின் தேசியபாதுகாப்புச்சபை கூட இல்லை என்பதை சிரிர மெண்டிஸ், தனது சாட்சியத்தில் கூறினார்.

அத்துடன் சஹ்ரான் குழு ஊடாக ஐ.எஸ் நடத்த இருந்த நாசகாரத் தாக்குதல் திட்டங்கள் குறித்து இந்தியா எச்சரிக்கை விடுத்ததாகவும். இதுகுறித்து அரசதலைவர் மைத்திரிபால சிறிசேனாவுக்கு தெரிந்திருந்தது எனவும் அவர் சுட்டிக்காட்டியிருந்தார்.

கொழும்பில் இருக்கும் இந்திய உயர்ஸ்தானிகராலயமும் ஒரு தாக்குதல் இலக்காக இருந்ததால் இது குறித்து மேலதிக அக்கறை எடுத்த இந்தியா தனது பாதுகாப்புச் செயலாளரை ஏப்ரல் 8ஆம் திகதியன்று(தாக்குதல் இடம்பெறுவதற்கு 13 நாட்களுக்கு முன்னர்) இலங்கைக்கு அனுப்பியதாகவும் சிரிர மென்டிஸ் கூறியிருந்தார்.

அவர் இவ்வாறு வாக்குமூலம் வழங்கிய நிலையில் உடனடியாகவே அதனை மறுதலித்த மைத்திரிபால சிறிசேனா கடந்த மாத இறுதியில் ஒரு அறிக்கையை வெளியிட்டார்.

அதில் தாக்குதல் தொடர்பாக தான் அறிந்திருக்க இல்லையென்றும் இதுகுறித்து தனக்கு அறிவுறுத்தப்பட்டவில்லை எனவும் விளக்கம் அளித்தார்.

இந்தநிலையில் கடந்த 8 ஆந்திகதி சிரிர மென்டிஸின் பதவிவிலகல் குறித்த செய்திகள் வந்தன.

மைத்திரிபால சிறிசேனா தான் அவரை அதிரடியாக பதவி நீக்கியதாக முதலில் செய்திகள் வந்தன. ஆனால் பின்னர் வந்த செய்திகளில் சிரிர மென்டிஸே தனது பதவியில் இருந்து விலகியதாக கூறப்பட்டது.

ஆக மொத்தம் சிறிலங்காவின் புலனாய்வுத்துறைத் தலைவர் தானாக பதவி விலகினாரா? இல்லை விலக்கப்பட்டாரா என்ற வாதப்பிரதிவாதங்கள் தொடர்கின்றன.

# தாக்குதல்களால் பாதிக்கப்பட்டவர்களுக்கு அரசுத்தலைவர் நிதி உதவி




சிறிலங்காவில் ஏப்ரல் 21 ஈஸ்ரர் நாளில் நிகழ்ந்த பயங்கரவாதத் தாக்குதல் சம்பவங்களின் போது தேடுதல் நடவடிக்கைகளில் ஈடுபட்ட வேளைகளில் உயிரிழந்த சிறிலங்கா காவல்துறை அதிகாரிகளது குடும்பங்களுக்கு தலா 25 இலட்ச ரூபாய் நிதி வழங்கியுள்ளார்,

சாய்ந்தமருது பிரதேசத்தில் தீவிரவாதிகள் தொடர்பான தகவல்களை வழங்கிய முஸ்லிம் இனத்தவர்கள் மூவருக்கு தலா 10 இலட்ச ரூபாய் நிதியை சிறிலங்கா அரசுத் தலைவர் வழங்கியுள்ளார்.

# பாராளுமன்ற தெரிவுக்குழு எதிர்காலத்தை

## நிறைவேற்று அதிகாரம் தீர்மானிக்க முடியாது

உயிர்த்த ஞாயிறு தினத் தாக்குதல்கள் குறித்து ஆராயும் நாடாளுமன்றத் தெரிவுக்குழுவின் எதிர்காலத்தை நிறைவேற்று அதிகாரம் தீர்மானிக்கவே முடியாது என்று நாடாளுமன்றத் தெரிவுக்குழுவின் உறுப்பினரும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் பேச்சாளரும் ஜனாதிபதி சட்டத்தரணியுமான எம்.ஏ.சுமந்திரன் தெரிவித்தார்.

பாராளுமன்றத் தெரிவுக்குழுவை இரத்துச் செய்யுமாறு ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேன கோரிக்கை விடுத்துள்ளமை தொடர்பாகக் கருத்து வெளியிடும்போதே சுமந்திரன் இவ்வாறு கூறினார்.

தெரிவுக்குழு தொடர்பில் தீர்மானம் எடுப்பது பாராளுமன்றத்தின் வேலை. அது நிறைவேற்று அதிகாரத்தின் வேலையல்ல. தெரிவுக்குழுவின் செயற்பாடு தொடரும் என்றும் அவர் மேலும் தெரிவித்தார்.




# தமிழக நாடக - திரைப்படக் கலைஞர் கிரேசி மோகன் காலமானார்



தமிழகத்தில் சிறந்த ஆளுமைமிக்க நாடக ஆசிரியராக, நடிகராக, கதாசிரியராக, வசனகர்த்தாவாக பன்முகம் கொண்ட கலைஞராக வலம் வந்து எல்லாத்தரப்புக் கலைஞர்களோடும் மிகச்சிறந்த கலை உறவைக்கொண்டிருந்த 'கிரேசி' மோகன்(66) 10.06.2019 அன்று மாரடைப்பால் சென்னையில் காலமானார்.

மோகன் ரங்கமாச்சாரி என்ற இயற் பெயர் கொண்ட கிறேசி மோகன் பொறியியல் பட்டதாரியாவார்.

இவர் கல்லூரிக் காலத்திலேயே நாடகங்களை எழுதத் தொடங்கினார். மாது மிரண்டால், சாட்டிலைட் சாமியார், சாக்லேட் கிருஷ்ணா, மதில் மேல் மாது உள்ளிட்ட 5000க்கும் மேற்பட்ட நகைச்சுவை நாடகங்களில் முத்திரை பதித்தவர், கமல்ஹாசன் மூலம் தமிழ் சினிமாவில் தொடர்ந்து வசனம் எழுதினார்.

'சதிலீலாவதி', 'அபூர்வ சகோதரர்கள்', 'மைக்கேல் மதன காமராஜன்', 'பஞ்ச தந்திரம்', 'வசூல் ராஜா எம்பிபிஎஸ்', 'காதலா காதலா', 'அருணாச்சலம்', 'மிஸ்டர் ரோமியோ', 'தெனாலி' உள்ளிட்ட பல படங்களுக்கு வசனம் எழுதியுள்ளார். 50க்கும் மேற்பட்ட திரைப்படங்களில் நடித்துள்ளார்.

கல்யாணத்துக்கு கல்யாணம், விடாது சிரிப்பு உள்ளிட்ட பல்வேறு தொலைக்காட்சித் தொடர்களைத் தயாரித்த 'கிரேசி' மோகன் 100 சிறுகதைகளை எழுதியுள்ளார். தினம் ஒரு வெண்பா எழுதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தவர் இதுவரை 40 ஆயிரத்துக்கும் மேற்பட்ட வெண்பாக்களை எழுதியுள்ளார்.

உடல்நலக் குறைவால் சென்னையில் உள்ள தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்த 'கிரேசி' மோகன் ஜூன் 10ம் திகதி பகல் 2 மணிக்கு மாரடைப்பால் காலமானார். அவரது மறைவுக்கு திரையுலகக் கலைமுகங்கள் இரங்கல் தெரிவித்து வருகின்றனர்.

# மீண்டும் வன்முறை ஏற்பட்டால் நாடு பேரழிவைச்சந்திக்கும்

## பிரதமர் ரணில் விக்கிரமசிங்க எச்சரிக்கை!



நாட்டில் மீண்டும் இன வன்முறைகள் நிகழ்ந்தால் சிறிலங்கா பேரழிவைச் சந்திக்க நேரிடும் என்று சிறிலங்கா பிரதமர் ரணில் விக்கிரமசிங்க எச்சரித்துள்ளார்.

ஏப்ரில் 21 உயிர்த்த ஞாயிறு தாக்குதல்களைத் தொடர்ந்து பாதுகாப்பு தொடர்பில் ஏற்பட்ட அச்சுறுத்தல்கள் நீக்கப்பட்டிருக்கும் நிலையில், மீண்டும் இன வன்முறைகள் நிகழலாம் என வெளிநாடுகள் பல சந்தேகம் கொண்டிருப்பதாகவும் ரணில் தெரிவித்துள்ளார்.

உயிர்த்த ஞாயிறு தாக்குதல்களைத் தடுக்க முடியாமல் போயிருந்தாலும், அதனை அடுத்து தாம் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகள் மற்றும் படைத் தரப்பினர் செயற்பாடுகள் காரணமாக ஒட்டுமொத்த நாடாக எந்தவொரு சவாலையும் எதிர்கொள்ள தாம் தயாராக இருப்பதை அனைத்து நாடுகளும் ஏற்றுக்கொண்டுள்ளன என்றும் பிரதமர் குறிப்பிட்டார்.

இன வன்முறைகள் ஏற்படாத வகையில் மாவட்ட செயலாளர்கள் மாவட்ட மட்டங்களில் நடவடிக்கை எடுக்க வேண்டும். ஏனெனில் எங்காவது ஒரு சம்பவம் நிகழ்ந்தாலும் நாட்டின் சுற்றுலாத்துறை மீண்டும் வீழ்ச்சியுறும். சிலர் குறுகிய அரசியல் லாபங்களுக்காக இன வன்முறைகளை தூண்டுவதற்கு முயல்கின்றனர். எனினும் இறுதியில் நாடு பொருளாதார ரீதியாக மோசமான அழிவிற்குள் தள்ளப்பட்டுவிடும். அதனால் அனைவரும் பொறுப்புடன் செயற்பட்டு மீண்டுமொரு இன வன்முறைகள் ஏற்படாது இருப்பதை உறுதிசெய்ய அனைவரும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் ரணில் விக்கிரமசிங்க வேண்டுகோள் விடுத்துள்ளார்.

# விடுதலைப்புலிகளை அழித்தது பெரும் தவறு

## ஞானசாரதேரருக்குப் பிறந்தது ஞானம்





தமிழீழ விடுதலைப் புலிகளை அழித்தமை தாம் செய்த பெரும் தவறு என்று பொதுபலசேனா அமைப்பின் பொதுச் செயலாளர் ஞானசார தேரர் தெரிவித்துள்ளார்.

விடுதலைப் புலிகள் காலத்தில் இப்படியான அச்சுறுத்தல்களையோ, ஆபத்துக்களையோ நாடு சந்திக்கவில்லை. தமிழ் மக்களின் உரிமைகளுக்காகப் போராடியவர்கள் தமிழீழ விடுதலைப்புலிகள் என்றும் தேரர் கூறியுள்ளார்.

பத்திரிகை ஒன்றுக்கு வழங்கிய செவ்வியிலேயே தேரர் இதனைச் சுட்டிக்காட்டியுள்ளார்.

தாம் இனவாதிகள் இல்லை என்றும், நாட்டை மீட்டெடுக்கவே களத்தில் இறங்கியதாகக் குறிப்பிட்ட அவர், இஸ்லாமிய பயங்கரவாதிகளிடமிருந்து விரைவில் நாடு மீட்டெடுக்கப்படும் என்றும் கூறியவர் சிறிலங்கா ஒரு சிங்கள பௌத்த நாடு என்பதை அனைவரும் கவனத்தில்கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

சிங்களவர், தமிழர், முஸ்லிம்கள், பறங்கியர் என அனைத்து இன மக்களும் சுதந்திரமாக நாட்டில் வாழ முடியும்.

இஸ்லாமிய பயங்கரவாதிகளிடமிருந்து தேரர்களான தாம் நாட்டை மீட்டெடுப்பது உறுதி என்றும் ஞானசாரதேரர் தெரிவித்தார்.

1–ஆம் பக்க தொடர்ச்சி

### *சிறிலங்காவில் மீண்டும் ...*

தெரிவுக்குழு சம்பந்தமாக மைத்திரிபால சிறிசேன வெளியிட்டிருந்த அறிக்கைக்குரிய பதிலடி அறிக்கையொன்றையும் கடந்த 8 ஆந்திகதி அவர் வெளியிட்டார்.

இதேவேளை இலங்கையில் இடம்பெற்ற தாக்குதல் சம்பவம் தொடர்பான உண்மைகளை அறிந்துக்கொள்வதற்கு, மக்களுக்கு இருக்கும் உரிமையை இல்லாமல் செய்ய இடமளிக்கப்படாதென, நாடாளுமன்றத் தெரிவுக்குழுவின் உறுப்பினர் மாரசிங்க தெரிவித்துள்ளார். ஒருவேளை நாடாளுமன்ற அமர்வுகள் முடிவுக்குக் கொண்டுவரப்பட்டாலும் நாடாளுமன்ற தெரிவுக்குழு மீள எடுக்கப்படமாட்டாதென, அவர் சூளுரைத்துள்ளார். இதனால் நாடாளுமன்றத் தெரிவுக்குழுவை முடக்க முயலும் சிறிலங்காலங்கா அரசுத்தலைவருக்கும் அதனைக் காப்பாற்ற முனையும் மைத்திரிக்கும் இடையில் அதிகார இழுபறி ஒன்று உருவாகியுள்ளது.

இந்த இழுபறி தீவிரமானால் கடந்த ஆண்டின் ஒக்டோபர் மாதத்தில் உருவானதைப்போன்ற ஒரு பெரும் அதிகாரக்குழப்பம் மைத்திரிக்கும் நாடாளுமன்றத்துக்கும் இடையில் உருவாகும் என அஞ்சப்படுகிறது.

கடந்த முறை இடம்பெற்ற இந்த அரசியல் குழப்பம் 52 நாட்களுக்குத் தொடர்ந்தமை குறிப்பிடத்தக்கது.

# முஸ்லிம் அரசியல்வாதிகள்

## மஹிந்தவுடன் நேரடிப்பேச்சு!



சிறிலங்காவில் அண்மையில் நிகழ்ந்த தாக்குதல் சம்பவங்களின் பின்னர் தமது அமைச்சு, ஆளுனர் பதவிகளை இராஜினாமாச் செய்து கொண்ட முஸ்லிம் அரசியல்வாதிகள் எதிர்க்கட்சித்தலைவர் மஹிந்த ராஜபக்சவைச் சந்தித்துப் பேசியுள்ளனர்.

கொழும்பு, நீர்கொழும்பு, மட்டக்களப்பு ஆகிய பகுதிகளில் நிகழ்ந்த பயங்கரவாதத் தாக்குதல் சம்பவங்களுக்கும் முஸ்லிம் அரசியல்வாதிகள் சிலருக்கும் தொடர்பிருப்பதாக வெளியான சர்ச்சையை அடுத்து, அவ்வாறு சம்பந்தப்பட்டவர்கள் ஆளுனர்களாகவும், அமைச்சர்களாகவும் இருக்க முடியாது என எதிர்ப்புக்கிளம்பியது.

இதனால் தமது பதவிகளைத் துறந்தவர்களே மகிந்தவை சந்தித்து முஸ்லிம் சமூகத்தினர் மீது மேற்கொள்ளப்படும் கெடுபிடிகள் தொடர்பாக எடுத்து விளக்கியுள்ளனர்.

# பாதுகாப்பு அதிகாரிகள் முன்னிலையாக வேண்டும்

## சிறிலங்கா சபாநாயகர் அலுவலகம் அதிரடி அறிவிப்பு!

சிறிலங்கா பாதுகாப்புத்துறை அதிகாரிகளுக்கு பாராளுமன்றத் தெரிவுக்குழு அழைப்பு அனுப்பினால் அவர்கள் முன்னிலையாக வேண்டும் என சிறிலங்கா சபாநாயகர் அலுவலகம் அதிரடி அறிவிப்பை வெளியிட்டுள்ளது.

அவ்வாறு முன்னிலையாகாத பட்சத்தில் அதற்குரிய விடயங்களுக்கு முகம் கொடுக்க வேண்டிய நிலை சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு ஏற்படும் என்றும் அந்த அறிவிப்பில் குறிப்பிடப்பட்டுள்ளது.

தாக்குதல் சம்பவங்கள், தொடர்பாக ஆராய்ந்து வரும் பாராளுமன்ற தெரிவுக்குழுவினரிடம் பாதுகாப்பு அதிகாரிகள் முன்னிலையாக மாட்டார்கள் என சிறிலங்கா ஜனாதிபதி அறிவித்திருந்த நிலையிலேயே சபாநாயகர் அலுவலகம் இந்த அறிவிப்பை வெளியிட்டுள்ளது.

நிறைவேற்று அதிகாரம் என்பது பாராளுமன்ற செயற்பாடுகளில் தலையீடு செய்வது சரியானதா? என்றும் சபாநாயகர் அலுவலகம் கேள்வி எழுப்பியுள்ளது.

# சிறிலங்கா அரசுத்தலைவர் சபாநாயகர் இடையே முறுகல்!

நாட்டில் ஏப்ரல் 21ல் நிகழ்ந்த தாக்குதல்கள் தொடர்பாக உயர் நீதிமன்றத்தால் ஐந்து வழக்குகள் மீது விசாரணை செய்யப்பட்டுவருகிறது.

இந்நிலையில் ஏப்ரல் 21 தாக்குதல் தொடர்பில் தெரிவுக்குழுவொன்றினை நியமித்து விசாரணை செய்வது உயர் நீதிமன்றத்தின் செயற்பாடுகளில் பாதிப்பை ஏற்படுத்தும் என சட்டமா அதிபர் எழுத்து மூலமாகத் தமக்கு அறிவித்திருப்பதாக சிறிலங்கா அரசுத்தலைவர் மைத்திரிபால சிறிசேன தெரிவித்துள்ளார்.

ஜூன் 7ம் திகதி அரசுத்தலைவர் செயலகத்தில் நடைபெற்ற காவல்துறை திணைக்கள சிரேஷ்ட அதிகாரிகளுடனான சந்திப்பின்போதே சிறிலங்கா அரசுத்தலைவர் இவ்வாறு கூறினார்.

சட்டமா அதிபரது அந்த அறிவித்தலை தாம் சபாநாயகருக்கு அனுப்பி வைத்த போதிலும் சபாநாயகர் அதனைக் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படவில்லை என அரசுத்தலைவர் காவல்துறை அதிகாரிகள் முன்னிலையில் வருத்தம் தெரிவித்தார்.

சபாநாயகர் இவ்விடயம் குறித்து பாராளுமன்றத்தில் கருத்துக்களையும் வெளியிடாமை கண்டனத்துக்கு உரியது என்றும் சிறிசேன தெரிவித்தார்.

# துடுப்பாட்ட உலககிண்ணம் எந்த நாட்டுக்கு?

## பிரித்தானிய மைதானங்களில் ஆட்டங்கள்

பிரித்தானியாவில் இடம் பெற்றுவரும் 12வது உலகக்கிண்ண துடுப்பாட்டத் தொடரில் அடுத்த மாதம் 14ஆந் திகதி ஞாயிற்றுக்கிழமை அன்று வெற்றி பெறப்போகும் நாடு எதுவாக இருக்கும் என்ற ஊடகங்கள் தற்போது பரபரப்பாகியுள்ளன.

மே 30ஆந்திகதி லண்டன் ஓவல் மைதானத்தில் தொடங்கிய இந்த சுற்றுப்போட்டியின் ஆட்டங்கள் இங்கிலாந்து மற்றும் வேல்ஸ் மைதானங்களின் இடம் பெற்றுவருகின்றன.

45 லீக் போட்டிகள் மற்றும் 2 அரையிறுதி போட்டிகள் மற்றும் இறுதியாட்டம் என 48 போட்டிகளை கொண்ட இந்த தொடரில் இங்கிலாந்து, இந்தியா, ஒஸ்ரேலியா, நியூசிலாந்து, பாகிஸ்தான், சிறிலங்கா, தென்னாபிரிக்கா, பங்களாதேஷ், மேற்கிந்திய தீவுகள் மற்றும் ஆப்கானிஸ்தான் உள்ளிட்ட 10 அணிகள் மோதிவருகின்றன

இந்த முறை போட்டிமுறையில் மாற்றம் செய்யப்பட்டுள்ளது. 1992 உலகக்கோப்பையில் பின்பற்றப்பட்ட முறையே தற்போது கடைபிடிக்கப்படுகிறது. ஒவ்வொரு அணியும் மற்ற அணிகளுடன் 'ரொபின்சுற்று' முறை எனப்படும் மோத ஒவ்வொரு அணியும் 9 போட்டிகளில் விளையாட வேண்டிய நியதி உள்ளது.

லீக் சுற்று முடிவில் புள்ளிகள் அடிப்படையில் முதல் 4 இடங்களை பிடிக்கும் அணிகளே அரை இறுதிபோட்டிக்குத் தகுதிபெறும்.

இந்தமுறை இங்கிலாந்து, ஒஸ்ரேலியா, பாகிஸ்தான் ஆகிய அணிகளுக்கு இடையே கடும் போட்டி இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இறுதியாக 2015 இல் ஒஸ்ரேலியாவே உலக கிண்ணத்தை வென்றிருந்தது.இங்கிலாந்து அணி இதுவரை ஒரு முறை கூட உலக கிண்ணத்தை வெல்லவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

IBC தமிழ்
பத்திரிகை

# ஐபிசி தமிழ் ஒலி ஊடகம் அகவை 22

எம் தமிழ் உறவுகளே!

வரலாறு தொடர்கிறது. அவை மறக்கப்படவோ, மறைக்கப்படவோ கூடாது.

எமது ஊடகத்தை மிகவும் நேசித்து, நிகழ்ச்சிகளில் பங்கு பற்றி வாழ்ந்து வந்த இளவாலை அமுதுப்புலவர் அவர்களின் நூற்றாண்டு விழா காலம் இது. அவர் கூறும் வரிகள்: அனைத்துலக ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம் தமிழ் என்ற ஊடகத்துக்கு அகரம் எழுதியவர் தாஸீஸியஸ் அவர்கள் என்பார்.

ஆம், 9 ஜூன் 1997 அன்று தமது வலிமைக்குட்பட்டு, அவரது நட்பு வட்டத்தைச் சேர்ந்த சிலரது நிதிப் பங்களிப்போடு, மரியாதைக்குரிய நாடகர்- ஏடகர்- ஊடகர் ஏ.சி.தாஸீஸியஸ் அவர்களால் ஆரம்பிக்கப்பட்டது நாம் எல்லோரும் இன்று மகிழ்வோடு இருந்து பணியாற்றும் ஐபிசி தமிழ் ஒலி ஊடகம்.

முள்ளிவாய்க்கால்வரை மக்களுக்கான தனது பணிசெய்து, இறுதியில் தன்னைத் தக்கவைக்கமுடியாது, பல நிர்வாக மாற்றங்களைச் சந்தித்தது. இருந்தும் தொடர்ச்சியாக இயங்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டபோது ஐபிசி தமிழ் ஒலி ஊடகம் மூச்சிழந்துவிடக் கூடாது என்ற உயர் எண்ணம் கொண்டு 2014 பெப்ருவரியில் எங்கள் குழுமத்தின் செயல் அதிபர் கந்தையா பாஸ்கரன் அவர்களால் கொள்வனவு செய்யப்பட்டது.

1997ல் நாம் கண்ட கனவு, தாயகத்தில் கலையகம் அமைத்து அங்கிருந்து நேரடியாக நிகழ்ச்சிகள் நடாத்த வேண்டும் என்று ஆசைப்பட்டோம். அன்று அதிகாலை 5.30 முதல் 6.30 வரை ஒரு மணி நேரம் உறவுப்பாலம் அமைத்தோம். இப்பொழுது ஐபிசி தமிழ் கலையகம் யாழ்ப்பாணத்தில் அமைந்துள்ளது. அங்கிருந்து அடுத்த தலைமுறையைச் சேர்ந்தவர்கள் தமிழ் ஊடகப்பணியாற்றுகிறார்கள். இளையதலைமுறை ஊடகச் செல்வங்கள் ஒருங்கிணைந்து பணியாற்றும் பாங்கினைத் தினமும் கேட்டு மகிழ்வுறுகிறோம்.

எமக்கான அடையாளம் எமது மொழி. அதில் மென்மேலும் கவனம் செலுத்தி அதன் மேன்மையை நிலை நிறத்துவதை உயர்வான கடமையாகக் கொள்ள வேண்டும்.

உலகில் எந்த மூலைக்குச் சென்றாலும் அங்கே ஓர் ஒலி ஊடகம் இயங்கிக்கொண்டிருக்கும். அவ்வாறு அவற்றை இயக்குபவர்களில் பெரும்பான்மையானவர்கள் ஈழத்தவர்களாகவே இருக்கிறார்கள்.

வானொலித் தமிழுக்கும் ஈழத்தமிழுக்கும் நிறையவே தொடர்புண்டு. உலகப்பரப்பில் வானொலித் தமிழை நிலை நிறுத்தி வைத்திருப்பவர்கள் நாம் என்ற பெருமிதம் எமக்கு உண்டு.

ஒலிபரப்புப் பண்பாடும் தமிழும் எங்கள் ஒவ்வொருவராலும் பேணப்பட வேண்டும். அடுத்துவரும் தலைமுறையும் நேர்த்தியான விடயங்களைத் தொடர வேண்டும் என்பதே விருப்பம்.

ஐபிசி தமிழ் ஒலி ஊடகம் என்பதே யாவற்றுக்கும் அடித்தளம். 2015ல் ஒளி ஊடகம், தொலைக்காட்சி தோற்றம் பெற்றமை, இணையத்தளம் விரிவாக்கம் அடைந்தமை, பத்திரிகை தொடங்கப்பட்டமை, ஐபிசி தமிழா என்னும் பிரமாண்டமான கலைத்திருவிழா நாடுகள் ஒவ்வொன்றிலும் நடைபெறுவது.

2019 ஜூன் 29 அன்று கண்டம் கடந்து கனடா தேசத்தில் 1300 ஈழத்தமிழ் இளைய, மூத்த கலைஞர்களுடன் ஐபிசி தமிழா பெரும் கலைவிழா நடைபெறுகிறது.

ஐபிசி தமிழ் செயற்பாடுகள் யாவற்றுக்கும் ஆணிவேராகத் திகழும் எம் தமிழ் உறவுகள் அனைவருக்கும், வர்த்தகப்பெருமக்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி.


## உங்கள் தொடர்புகட்கு

மின்னஞ்சல் : press@ibctamil.com

| | | | |
|---|---|---|---|
| பிரித்தானியா சிறீ | +44 7832 769522 | இத்தாலி ரஞ்சன் | +39 331 8595851 |
| பிரான்ஸ் கலையகம் | +33 7558 55555 | நோர்வே விக்கி | +47 998 95 050 |
| யேர்மனி சுமித்திரன் | +49 151 27990990 | டென்மார்க் கி.செ.துரை | +45 266 58809 |
| சுவிஸ் ஜீவன் | +41 78 300 00 47 | பெல்ஜியம் ரூபன் | +32 4888 38808 |
| நெதர்லாந்து நாதன் | +31 6 1418 0532 | கனடா கலையகம் | +1 416 477 2550 |
| சிங்கப்பூர் கோபி | +65 9829 1944 | இலங்கை கலையகம் | +94 21 2030 600 |
| இந்தியா கலையகம் | +91 44 4203 3666 | | |



## பிரசுரம்

London Tamil Media Ltd.
Unit 1 10 Stonefield Way, Ruislip, Middlesex,HA4 0JS, United Kingdom.
Tel: +44 203 794 4000 • Email : info@ibctamil.com


# சிறிலங்காவை இந்தியா கைவிடாது!

## மோடியின் 4 மணிநேர அதிரடி சந்திப்புக்களில் செய்தி!!



இலங்கையில் கடந்த ஏப்ரல் மாதம் 21 ஆந்திகதி இடம்பெற்ற குண்டுத்தாக்குதல்களுக்குப் பின்னர் சிறிலங்காவுக்கு பயணம்செய்த முதலாவது உலகத் தலைவராக இந்தியப்பிரதமர் நரேந்திரமோடி பதிவுபெற்றுள்ளார்.

மோடியின் சிறிலங்காப்பயணம் ஏறக்குறைய 4 மணிநேரமே இடம்பெற்றிருந்தது. ஆயினும் தனது சந்திப்பில் சிறிலங்கா அரசியல் அரங்கின் முக்கிய பிரமுகர்கள் அனைவருடனும் பேச்சுக்களை நடத்திய அவர் இலங்கையை இந்தியா ஒருபோதும் கைவிடாது என்ற உறுதிமொழியை அவர்களுக்கு வழங்கியுள்ளமை முக்கியமாக நோக்கப்படுகிறது.

தனது மாலைதீவுப் பயணத்தை முடித்தபின்னர் அங்கிருந்து நேராக அவர் தனது, 59 பேர் அடங்கிய தூதுக்குழுவுடன் சிறிலங்காவுக்கு சென்றிருந்தார். இலங்கையின் பாதுகாப்பு நிலவரங்கள் பலவீனமாக இருப்பதால் நரேந்திர மோடியின் பாதுகாப்புக்கு என இன்னொரு போயிங் 737 ரக விமானத்தில் சிறப்பு படையினரும் வந்திருந்தனர். கொழும்பு நகரில் பாதுகாப்பும் பல மடங்கு அதிகரிக்கப்பட்டிருந்தது.

கட்டுநாயக்கா விமானநிலையத்தில் வந்திறங்கிய நரேந்திர மோடியை வரவேற்ற சிறிலங்கா பிரதமர் ரணில் விக்கிரமசிங்க அவருடன் தரைவழியாக கொழும்புக்கு பயணித்தபோதே இருதரப்புப் பேச்சுக்களை மேற்கொண்டார். இந்தப்பேச்சுக்களின் போது சிறிலங்காவுக்கு முழுமையான உதவிவழங்கப்படும் என்ற உறுதிமொழியை தான் வழங்கியதாகவும் மோடி ருவிற்செய்தி ஊடாக தெரிவித்தார்.

விமான நிலையத்திலிருந்து நேராக கொழும்பு கொச்சிக்கடை புனித அந்தோனியார் ஆலயத்துக்கு சென்ற இரண்டு பிரதமர்களும் குண்டுத்தாக்குலுக்கு இலக்கான அந்த தேவாலயத்தில் கொல்லப்பட்ட மக்களுக்கு அஞ்சலி செலுத்தியதுடன் வழிபாடுகளையும் செய்தனர்

அதன் பின்னர் நேராக சிறிலங்கா அரசதலைவர் செயலகத்திற்குச் சென்ற மோடிக்கு செங்கம்பள வரவேற்பும் இராணுவ அணிவகுப்பு மரியாதையும் அளிக்கப்பட்டது. இதன்பின்னர் மைத்திரியுடன் அவர் பேச்சுக்களை நடத்தினார். இந்தச்சந்திப்பின் போது மோடிக்கு தியானநிலை புத்தர்சிலையொன்றையும் மைத்திரி நினைவுச்சின்னமாக வழங்கினார்.

மைத்திரியுடனான சந்திப்புக்குப்பின்னர் சிறிலங்காவின் எதிர்க்கட்சித்தலைவர் மகிந்த ராஜபக்ச மோடியை சந்தித்தார். இந்த சந்திப்பின்பின்னர் இரா. சம்பந்தன் தலைமையிலான தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக் குழு அவரை சந்தித்தது. மாவை சேனாதிராஜா, செல்வம் அடைக்கலநாதன், சுமந்திரன், சித்தார்த்தன் ஆகியோரும் இந்தக்குழுவில் இடம்பெற்றிருந்தனர்.

இறுதியாக இந்திய உயர் ஸ்தானிகராலயத்தில் இடம்பெற்ற நிகழ்வொன்றில் இலங்கையில் வாழும் இந்திய மக்களை சந்தித்த அவர் அங்கு உரையொன்றையும் நிகழ்த்தினார்.

இதன் பின்னர் அவர் இலங்கையை விட்டு புறப்பட்டார். விமான நிலையத்துக்கு சென்ற ரணில் அவரை வழியனுப்பிவைத்தார்.

சுமார் 4 மணிநேரமே இலங்கையில் தங்கியிருந்தாலும் முழுமையான ஒரு நிகழ்ச்சிநிரலுக்கு உரிய சந்திப்புக்களை மோடி நடத்தியதன் ஊடாகவும், குண்டுத்தாக்குதல்களுக்குப் பின்னர் சிறிலங்காவுக்கு பயணம்செய்த முதலாவது உலகத்தலைவராக இந்தியப்பிரதமர் பதிவுபெற்றுள்ளமையும் இலங்கை மீதான தனது ஆளுமை குறித்த செய்தியை இந்தியா வெளிப்படுத்தியதாகவே நோக்கப்படுகிறது.

# பிரித்தானியாவின் புதிய பிரதமர் யார்?

## 11 பேர் போட்டியில் - பிரெக்சிற் சிக்கலில்!!

பிரித்தானியாவில் ஆளும் கொன்சவேட்டிவ் கட்சியின் தலைவர் பதவியில் இருந்து திரேசாமே கடந்த 7 ஆந்திகதி விலகியுள்ள நிலையில் கட்சிக்குப் புதிய தலைவரை தெரிவு செய்யும் போட்டிக்களம் சுறுசுறுப்படைந்துள்ளது.

கொன்சவேட்டிவ் கட்சிக்கு புதிய தலைவராக வருபவரே பிரதமராக நியமிக்கப்படவிருந்தாலும் புதிய தலைவர் ஒருவர் நியமிக்கப்படும்வரை திரேசாமே யே பிரதமராக தொடர்ந்தும் பதவி வகிக்கவுள்ளார்.

திரேசாமேக்குப்பின்னர் கொன்சவேட்டிவ் தலைவர் பதவியை பெற்றுக்கொள்ளும் முனைப்புடன் பொறிஸ் ஜோன்சன் டொமினிக் ராப், மைக்கேல் கோவ், ஜெரமிஹண்ட் அன்றீயா லெட்சம், சஜீத் ஜாவிட் உட்பட கட்சியின் உறுப்பினர்கள் 11 பேர் தற்போது போட்டிக்களத்தில் உள்ளனர்.

இதில் அதிக உற்றுநோக்கலை ஏற்படுத்திய பொறிஸ் ஜோன்சன் பிரெக்சிற் குறித்த கடும்போக்கு கொள்கையை தொடர்ந்தும் பேசிவருகிறார்.

ஐரோப்பிய ஒன்றியத்தில் இருந்து நோ-டீல் எனப்படும் உடன்பாடின்றிய வெளியேற்றத்தை ஆதரிப்பவர். தான் பிரதமராக வந்தபின்னர் ஐரோப்பிய ஒன்றியம் சில விட்டுக்கொடுப்புக்களை செய்யாதுவிட்டால் 39 பில்லியன் பவுண்ஸ் பிரெச்சிற் நிதியை ஒன்றியத்துக்கு செலுத்தப்போவதில்லை எனவும் தற்போது அவர் குறிப்பிட்டுள்ளார்.

இதேபோல இன்னொரு முன்னணி வேட்பாளரான மைக்கேல் கோவ், தனது 20 வயதுகளில் கொக்கெயின் போதைப்பாவனையாளராக இருந்த விடயம் மீண்டும் பேசுபொருளாகியுள்ளது. மைக்கேல் கோவ் தான் ஒரு கொக்கெயின் பாவனையாளராக இருந்தவிடயத்தை பகிரங்கமாக ஒத்துக்கொண்டு அது தவறான ஒரு பழக்கம் என்பதை ஏற்றுக்கொண்டமை குறிப்பிடத்தக்கது.

குறள் பால: அறத்துப்பால் குறள்இயல: இல்லறவியல் அதிகாரம்: இல்வாழ்க்கை குறள்: 41



**இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.**

*இல்லறத்தில் வாழ்பவனாகச் சொல்லப்படுகிறவன் அறத்தின் இயல்பை உடைய மூவருக்கும் நல்வழியில் நிலை பெற்ற துணையாவான்.*

# நவிகேசன் நடராசா

சிங்கக்கொடியார் வீட்டிலை அத்துரலியே ரத்தினம் ஞானசாரம் எல்லாம் எடுத்துவிட்ட கடும்போக்கு பூமராங்வித்தைகளை எங்கடை கூட்டுப் பதவிவிலகல் தந்திரத்தாலை அப்படியே திருப்பி அடிச்சம் எண்டு முஸ்லிம் அரசியல்வாதிகள் தங்கடை கொடுப்புக்குள்ளை சிரிக்கினம்.

ஆனால் இப்பிடி முஸ்லிம் அரசியல்வாதிகள் எல்லாம் ஒண்டா நிப்பினம் எண்டு எதிர்பாராத பௌத்தமுகங்கள் இப்ப அவைக்கு வாங்கோ வாங்கோ வந்து பதவிகளை எடுங்கோ எண்டு ஒலிவ்கிளையை நீட்டினம்.

இதுக்குள்ள ஓயாமல் சவுண்டுவிட பின்னிற்காத முன்னாள் ஆளுனர் ஹிஸ்புல்லாவோ இலங்கையை விட்டு வெளியேறுவதற்கு 7 ஆயிரம் முஸ்லிம் குடும்பங்கள் றெடி! உள்ளூரிலை தான் நாங்க சிறுபான்மை உலகிலை நாமதான் பெரும்பான்மை. அப்பிடி இப்பிடி எண்டு காத்தான்குடியிலை காச்சு மூச்சு எண்டும் கத்தியிருக்கிறார். ஆனா பாருங்கோ மிஸ்டர். ஹிஸ்புல்லா உலகிலை பெரும்பான்மையாக இருந்தாலும் உள்ளூரிலை தமிழரோடையும் ஒத்துவாழவேணுமெல்லே!

அசோகச்சக்கர பெரியண்ணன் 2.0 மோடியார் தன்ரை இரண்டாம் தவணைக்குரிய முதலாவது திக் விஜயத்தை மாலைதீவுக்கு செய்தார். அப்பிடியே சிங்கக்கொடி சின்னத்தம்பி வீட்டையும் எட்டிப்பார்த்தார்.

ஆதாயம் இல்லாமல் மோடியார் வருவாரோ? அண்மையிலை மைத்திரியார் சீனாவுக்குப்போன போது செய்த பாதுகாப்பு உடன்பாடு குறித்து அசோகச்சக்கர பெரியண்ணனுக்கு மனப்பாரமாம்.

சீனாக்காரரோ கில்லாடியள் சிங்கக்கொடியார் நாட்டிலை உள்ள தங்கடை சொத்துப்பத்துகளை பாதுகாக்க தாங்களே சிங்கக்கொடிப்படைக்கு ரெயினிங் கொடுக்கிறம் எண்டு டீல் போட்டுட்டினம். இனி அவை ரெயினிங் கொடுக்குற ஆக்கள் தான் சிங்கக்கொடியார் வீட்டு சீனச்சொத்துப்பத்துகளை காவல் காக்கப்போகினம்.

சீனாக்காரரோடை இப்பிடி ஒரு டீல் போட்டதை பெரியண்ணருக்கு சமாளிக்க கொழும்புத்துறைமுகத்தின் கிழக்கு கொள்கலன் முனையத்தை அவைக்கும் ஜப்பானுக்கும் என சிங்கக்கொடி சின்னத்தம்பியாரும் பங்கு கொடுத்தார்.

எண்டாலும் இதுக்கும்மேலே ஒரு ஆதாயம் பார்க்கத்தான் அழைப்பின் அடிப்படையில் 2.0 மோடியார் கொழும்பையும் எட்டிப்பாத்ததாக மகாஜனங்கள் சொல்லினம்.

ஆரியக் கூத்தாடினாலும்தாண்டவக்கோனே.. கொண்ட காரியத்தில் கண்ணாயிரு தாண்டவக்கோனே எண்ட கணக்கிலை நொடிஞ்சுபோன தங்கடை உல்லாசப்பயணத்துறைக்கு மீண்டும் உயிர் கொடுக்க சிங்கக்கொடியார் படாதுபாடு படுகினம்.

கி.மு கி.பி போல ஐ. எஸ் காரர் நாசமறுக்கமுன்னர் 70 வீத உச்ச நிலையில் நிண்ட உல்லாசப்பயணத்துறை இப்ப 7 வீதத்துக்கு குறைஞ்சிட்டுது. மைத்திரியாரும் ரணிலாரும் வெளிநாட்டு ராஜதந்திரிகளிடம் இரங்கற்பாக்களை பாடினதாலை சில நாடுகள் இப்பத்தான் கொஞ்சம் மனமிரங்கி பயணத் தடைகளை தளர்த்தி வருகினம்.

இதுக்குள்ளை தங்கடை நாட்டுக்குவரும் உல்லாசப்பயணிகளுக்கு உயிர்ச்சேதாரங்கள் ஏதாவது நடந்தால் ஓராளுக்கு 100 மில்லியன் ரூபா காப்புறுதி எண்டு வேறை அறிவிப்பு. ஆனாலும் உல்லாசத்துக்கு பயணத்துக்கு என சனம் வரவேணுமே?

---

நீராடும் கடலுடுத்த தமிழகத்திலை இரண்டொரு நாளுக்கு முன்னர் எங்கடை மாவையாரின்ரை தலை தெரிஞ்சது. விசயம் என்னவெண்டு விசாரிச்சால் திமுகவுக்கு வாழ்த்துச்சொல்ல வந்தவர் எண்டு உதயசூரியன்காரர் சொல்லினம்.

ஐயய்யோ சங்கரியாரின்ரை உதயசூரியன்காரர் சொன்ன சங்கதி என சட்டுப்புட்டெனவிளங்கிக்கொள்ளக்கூடாது. இது அக்கரையிலுள்ள தி.மு.க உதயசூரியனார் சொன்ன அக்கறை செய்தி.

சரி சரி அதைவிடுங்கோ. முன்னாள் முதல்வர் விக்கியர் முதலிலை வாழ்த்துச்சொல்லஓடிப்போக முன்னர் நாம் காரியத்தைகூடிக்கொள்ள வேணுமெண்டு தானாம் மாவையர் போனவர்.

ஆனா ஸ்ராலின்- மாவை சந்திப்பை டெல்லி எப்படிப்பார்க்குமோ? அதுவும் மோடியார் 2.0 எந்திரன் போல திமுகவோடை முறைச்சு நிக்கிறாரே!

# துருத்திக் கொண்டு நிற்கும் பேரினவாதமும் மறைக்க முயலும் அரசியல் வாதிகளும்!

'ஜாதிக ஹெல உருமய' கட்சியின் தலைவரும், பாராளுமன்ற உறுப்பினருமான அத்துரலிய இரத்தன தேரரின் உண்ணாவிரதமும் அதனைத் தொடர்ந்து முஸ்லீம் அரசியல்வாதிகளின் பதவி விலகலும் இலங்கைத் தீவின் அண்மைய அரசியலில் முக்கிய இடத்தைப்பிடித்துக் கொண்ட செய்திகள். முஸ்லீம் அரசியல்வாதிகளின் கூட்டான பதவி விலகல் அவர்களது மதம் சார்ந்த சமூக ஒற்றுமையை வெளிக்காட்டுவதாகவும் இதனை தமிழ் அரசியல்வாதிகளும் பின்பற்ற வேண்டும் எனச் சில தமிழ்த் தரப்புகளிலிருந்து கருத்து வெளியிடப்படுகிறது. சிறிலங்கா ஆட்சிமையத்தின் ஒரு அங்கமான பௌத்த மகாசங்கத்தினரோ மேற்குறித்த அரசியல்வாதிகள் தமது பதவிகளில் மீள ஏற்றுக்கொள்ள வேண்டும் எனக் கோரிக்கை விடுத்திருக்கிறார்கள். அவ்வாறாயின் இரத்தன தேரர் என்ற தனிமனிதரின் அல்லது அவரைத் தலைவராகக் கொண்ட ஜாதிக ஹெல உருமய போன்ற இனவாதக் கட்சியொன்றின் பலத்தில் இச்சம்பவங்கள் நடந்தேறினவா என்ற கேள்வி எழலாம். கூடவே சிறிலங்காவின் ஆட்சிமையத்தையும், ஜனநாயக கட்டமைப்புகளையும் ரத்தன தேரர் போன்றவர்களால் ஆட்டங்காண வைக்க முடியுமா என்ற கேள்வியும் எழலாம்.

இராஜகிரியவில் 'சதம் செவன' என்றபெயரில் பௌத்த மடாலயம் ஒன்றினை நடத்தும் இரத்தன தேரர், 2015ம் ஆண்டு ஜனாதிபதித் தேர்தலில் பொதுவேட்பாளராக நிறுத்தப்பட்ட மைத்திரிபால சிரிசேனவை ஆதரித்துச் செயற்பட்டவர்களில் முக்கியமானவர். தமது பங்காளிக் கட்சியான ஜாதிக ஹெல உருமயவின் தலைவர் என்ற வகையில் ஐக்கிய தேசியக்கட்சியின் தேசியப்பட்டியல் மூலம் நாடாளுமன்ற உறுப்பினராக நியமிக்கப்பட்டவர். அரசாங்கக் காணியில் அத்துமீறித் தனது ஆலயத்தை அமைத்திருப்பதாக இவர் மீதான குற்றச் சாட்டும் உண்டு. மகிந்த இராஜபக்சவின் ஆட்சிக்காலத்தில், நாட்டின் பொருண்மியத்தை மேம்படுத்துவதற்கு உதவும் என்ற வகையில் சூதாட்ட மையங்கள் (Casino) நிறுவுவதற்கு அனுமதி வழங்க முடிவுசெய்யப்பட்டபோது அதனை எதிர்த்துப்போராடியவர்களில் இரத்தன தேரரும் ஒருவர். அவரது போராட்டங்களால் சூதாட்ட மையங்களுக்கு அனுமதி வழங்குவதனைத் தடுத்து நிறுத்த முடியவில்லை என்பதும், இப்போது இவர் அங்கம்வகிக்கும் இரணில் அரசாங்கத்தால் முன்னெடுக்கப்பட்டுவரும் கொழும்பு துறைமுக நகரத்தில் மேலும் பல சூதாட்ட மையங்கள் அமையவிருக்கின்றன என்பதனையும் நாம் கருத்திற்கொள்ள வேண்டியுள்ளது.

இரத்தனதேரரின்போராட்டத்தினையடுத்து பதவிவிலகியதாக அறிவித்த முஸ்லீம் பாராளுமன்ற உறுப்பினர்களும், ஆளுனர்களும் இரத்தன தேரரின் போராட்டம் தொடருமாயின் முஸ்லீம் மக்கள் தாக்கப்படுவார்கள் எனவும் அவர்களை யாராலும் பாதுகாக்க முடியாதிருக்கும் என்பதாலேயே தாம் இம்முடிவிற்கு வந்ததாக அறிவித்திருந்தார்கள். தாம் அங்கம் வகிக்கும் அரசாங்கத்தால் முஸ்லீம் மக்களை ஏன் பாதுகாக்க முடியாதிருக்கிறது என்பது பற்றி அவர்கள் எதுவும் கூறுவதாயில்லை. மாறாக, தற்காலிகமான தமது நடவடிக்கைகள் மூலம் சிறிலங்காவின் ஆட்சி மையத்தைக் காப்பாற்றுவதிலேயே அவர்கள் குறியாக இருக்கிறார்கள்.

முஸ்லீம் அரசியல்வாதிகள் கூட்டாகப் பதவி விலகியமையை 1983ம் ஆண்டு ஆறாவது திருத்தச்சட்ட மூலத்தினை ஏற்றுக்கொள்ள மறுத்து தமது பதவிகளை இழந்த தமிழர் விடுதலைக் கூட்டணி பாராளுமன்ற உறுப்பினர்களின் நிலைப்பாட்டுடன் சிலர் ஒப்பிடுகிறார்கள். இரண்டு செயற்பாடுகளும் முற்றிலும் வேறுபட்ட நகர்வுகள் என்பதனை



உணர்ந்து கொள்வதன் மூலமே இன்றைய அரசியல் நிலமையை நாம் புரிந்துகொள்ளமுடியும். சிறிலங்காவின் அரசியலமைப்பில் கொண்டுவரப்பட்ட தமிழ்மக்களின் சுயநிர்ணய உரிமையை மறுக்கும் வகையிலான திருத்தத்தினை கூட்டணியினர் ஏற்றுக்கொள்ள மறுத்ததன் மூலம் சிறிலங்காவின் அரசமையத்திற்கு தமது எதிர்ப்பை காட்டினார்கள். ஆனால், முஸ்லீம் அரசியற் தலைமகளோ சிறிலங்காவின் அரசகட்டமைப்புகளைப் பாதுகாத்தபடி முகந்தெரியாத எதிரிக்கு எதிராகப் போராடுவதாக தமது வாக்காளர்களைத் திருப்திப்படுத்த முனைந்துள்ளார்கள்.

உயிர்த்த ஞாயிறு குண்டுத்தாக்குதல்களைத் தொடர்ந்து சந்தேகத்தின் பேரில் மூவாயிரத்திற்கு அதிகமான முஸ்லீம்கள் கைது செய்யப்பட்டு தடுத்து வைக்கப்பட்டுள்ளதாக முஸ்லீம் கொங்கிரசின் தலைவர் ரவூப் ஹக்கீம் கூறியிருக்கிறார். அதுபோன்று சிங்களப் பிரதேசங்களில் வாழும் முஸ்லீம் மக்கள் பல்வேறு நெருக்குவாரங்களுக்கு உட்பட்டுள்ளதாகவும் அவர்கள் மீது இனவாதத் தாக்குதல்கள் நடத்தப்படுவதாகவும் அங்கிருந்து வரும் தகவல்கள் தெரிவிக்கின்றன. இவற்றைத் தடுத்து நிறுத்த முடியாத அல்லது விரும்பாத நிலையிலே சிறிலங்கா அரச கட்டமைப்புகள் இருக்கின்றன. இதனை கடந்த எழுபதாண்டுகளாக சிறிலங்கா அரசின் ஒடுக்குமுறைக்கு முகங்கொடுத்துவரும் தமிழ்மக்களால் நன்கு விளங்கிக் கொள்ளமுடியும். இந்நிலையில், ஒடுக்கப்படும் முஸ்லீம் மக்களுக்கு தார்மீக ஆதரவு வழங்கவேண்டிய தமிழ் மக்களை திசைதிருப்பி சிறிலங்காவின் ஆட்சிமையத்தைக் காப்பாற்றும் கைங்கரியத்தில் சில தமிழ் அரசியல்வாதிகள் இறங்கியிருக்கின்றனர்.

தேரரின் உணவுத் தவிர்ப்புப் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்து மட்டக்களப்பு மாவட்ட தமிழரசுக்கட்சி நாடாளுமன்ற உறுப்பினர் வியாழேந்திரனும், இந்துசம்மேளனம்என்ற அதிகம்அறியப்படாத அமைப்பைச் சேர்ந்தவர்களும் அடையாள உணவுத் தவிர்ப்புப் போராட்டங்களை நடத்தியிருந்தனர். கிழக்கில் ஆளுனர் ஹிஸ்புல்லா மீதும், வடக்கில் அமைச்சர் ரிசாத் பதியுதீன் மீதும் தமிழ் மக்களுக்கு மிகுந்த வெறுப்பு இருக்கிறது. இவ்விருவரும் ஊழல் அரசியல்வாதிகள் என்பதிலோ, தமிழ் மக்களின் நிலங்களை அபகரிப்புச் செய்வதற்குத் துணை நின்றவர்கள் என்பதனையோ மறுப்பதற்கில்லை. ஆனால் இரத்தன தேரரின் போராட்டமானது இவர்களின் தமிழர்விரோத நடவடிக்கைக்கு எதிரானது அல்ல. மாறாக, சிங்களபௌத்த பேரினவாதத்திற்கு முண்டுகொடுக்கும் சிறிலங்காவின் ஆட்சிமையத்தை காப்பாற்றும் செயல் என்பதனை நாம் கவனத்தில் எடுக்கத் தவறிவிடக் கூடாது.

கிழக்கில் முஸ்லீம் மக்களுக்கும் தமிழ் மக்களுக்கும் இடையில் உள்ள முரண்பாடுகளை சிறிலங்கா அரசபடைகளும், சிங்கள, முஸ்லீம் அரசியல்வாதிகளும், தமக்குச் சாதகமாகப் பயன்படுத்தி வருகிறார்கள். அதனையே இப்போது சில தமிழ் அரசியல்வாதிகளும் செய்ய எத்தனித்து வருகின்றனர். தமிழ் ஊடகங்கள் சிலவும் தம்பங்கிற்கு முஸ்லீம் அரசியல்வாதிகளின் தமிழ் மக்களுக்கு எதிரான செயற்பாடுகளை வெளிச்சம் போட்டுக்காட்டி ஒடுக்கப்படும் தமிழ்மக்களையும் முஸ்லீம் மக்களையும் இணைய விடாது தடுக்க முயற்சிக்கின்றன.

சிங்கள பௌத்த பேரினவாத அரச கட்டமைப்பிற்கு எதிராகவே தமிழ்மக்கள் ஆயுதம் ஏந்திப் போராடினார்களே தவிர, சிங்கள, முஸ்லீம் இனங்களிற்கு எதிராகவோ,



குறித்தஎந்த அரசியற் தரப்பிற்கும் எதிராகவோ அவர்கள் போராடவில்லை. இன்றைக்கும் தமிழ்மக்களின் அரசியல் உரிமைகளை நிலை நிறுத்த முடியாமலிருப்பதற்கு சிங்கள பௌத்த பேரினவாதத்தை மையப்படுத்திய அரசகட்டமைப்பே காரணமாக அமைந்திருக்கிறது. அவ்வதிகாரத்திற்கு எதிராகப் போரிடுவதனை விடுத்து அதன்பக்கமிருந்து இன்னொரு இனத்தை ஒடுக்குவதற்கு துணைபோவது தமிழ் மக்களின் தேசியத் தலைமை முள்ளிவாய்க்காலில் விட்டுச் சென்ற அரசியற் செய்தியை நாம் இன்னமும் புரிந்து கொள்ளவில்லை என்பதனையே வெளிக்காட்டி நிற்கிறது.

# றெயுனியன் தீவை நோக்கிய இலங்கை அகதிக்கப்பல்கள்!!

"இலங்கையில் இருந்து 4 ஆயிரம் கிலோ மீற்றர் கடற்பயணத்தை மேற்கொண்டு, 260 இலங்கையர்களுடன் றெயுனியன் தீவை நோக்கிய கப்பல்கள்....."

"அகதிதஞ்சம் நிராகரிக்கப்பட்ட நிலையில் ஒரு தொகுதி இலங்கையர்கள் சிறிலங்காவுக்கு திருப்பி அனுப்பப்பட்டனர்"

சமீபத்திய காலங்களில் இவ்வாறுதான் பிரெஞ்சு ஊடகங்களில் செய்திகள் வெளியாகின்றன.

தமிழர்கள், சிங்களவர்கள் என இலங்கையர்கள் வந்து இறங்குகின்றனர் என பிரெஞ்சு ஊடகங்கள் தெரிவிக்கின்றன.

சில ஆண்டுகளுக்கு முன்னர் ஒஸ்ரேலியா, நியு சிலாந்து நோக்கி இலங்கைத்தமிழ் அகதிக்கப்பல்கள் கரை தொட்டதும் தொடாததும், இடைநடுவே இந்தோனேசியாவில் நங்குரமிட்டதும் என ஈழத்தமிழர்களின் அலைந்துழல்வு அகதி வாழ்வின் வேதனை மிகுந்த பக்கங்களாக அவைகள் இருக்கின்றன.

தற்போது அவ்வாறான ஆபத்து மிகுந்த கடல் பயணங்களாக பிரான்சின் ஆட்புல நிர்வாக ஆளுகைக்கு உட்பட்ட றெயுனியன் தீவை நோக்கி அமைகின்றது.

மத ரீதியாகவும் இனரீதியாகவும் தாங்கள் பாதிக்கப்பட்டிருப்பதாகவும், நாட்டில் ஏற்பட்டுள்ள கடுமையான உள்நாட்டு அரசியல் நெருக்கடி காரணமாகவும் இலங்கையில் இருந்து வெளியேற நேரிட்டதற்கான காரணங்களாக வந்திறங்கியவர்களால் பிரெஞ்சு ஊடகங்களுக்குக் கூறப்பட்டுள்ளது.

இந்தியப் பெருங்கடல் அகதிகளின் இடமாக றெயுனியன் தீவு மாறி வருவதாக பிரெஞ்சு ஊடகங்கள் எச்சரிக்கின்றன.

இவ்வாறு கப்பல் மூலமாக இத்தீவுக்கு வருகின்றவர்களை தடுப்பதற்கான நடவடிக்கைகளை பிரெஞ்சுப் பாதுகாப்புத்தரப்பு மேற்கொண்டிருந்தாலும், பெரும் சவாலாக அது மாறி வருவதோடு, குடியேறிகளின் அகதி விண்ணப்பத்தை கையாளுவதில் பெரும் சிக்கல்கலை நிர்வாகம் எதிகொள்வதாக தெரிவிக்கப்படுகின்றது.

காரணம் றெயுனின் தீவுக்கு இது புதிதாக காணப்படுகின்றது.

இந்த நெருக்கடி பிரெஞ்சு பாராளுமன்றத்திலும் எதிரொலித்துள்ளது.

வருகின்றவர்களை தடுப்பதற்கான பாதுகாப்பு பொறிமுறைகள் பலப் படுத்தப்பட்டுள்ளதாக எதிர்கட்சிகளின் கேள்விக்கு பதில் அளித்த ஆளும் தரப்பு, இவ்விடயத்தினை கையாளுவதற்கான அனைத்து விடயங்களும் முன்னெடுக்கப்பட்டுள்ளதாக தெரிவித்துள்ளது.

பிரான்சின் ஆட்புல நிர்வாக ஆளுகைக்கு உட்பட்டதாக இத்தீவு அமைவதால், இங்கு வந்து சேர்ந்தால் இங்கிருந்து பிரெஞ்சுக்கோ அல்லது அதன்வழி வேறு ஐரோப்பிய நாட்டுக்கோ செல்வது இலகு என்ற குறுக்குவழியாகவே இத்தீவை நோக்கி இவர்களது வருகை அமைந்துள்ளதென பிரெஞ்சு ஊடகமொன்று குறிப்பிடுகின்றது.

இதனை ஆமோதிக்கின்ற வகையிலேயே வந்து சேர்ந்தவர்களின் விருப்பமும் எதிர்பார்ப்பும் வெளிப்படுத்துகின்றது. ஆனால் நிலைமை எதிர்பார்ப்பை நிவர்த்தி செய்கின்ற அளவுக்கு இலகுவானதா அமையாது என்பது அகதிகளுக்கான சட்ட ஆலோசகர் சிவா சின்னப்பொடியின் கருத்தின் ஊடாக தெளிவாகின்றது. (தனிப்பெட்டியில் காண்க) வந்து சேருகின்றவர்களுக்கான அடிப்படை வசதிகளின் பிற தேவைகளை வழங்குவதற்கு உள்ளூர் தொண்டு அமைப்புக்கள் முன்வந்துள்ளன.

வந்து சேர்ந்தவர்களில் அரைவாசிக்கும் மேலானவர்கள் இலங்கைக்குத் திருப்பி அனுப்பட்ட நிலையில், எஞ்சிருக்கின்றவர்கள் தீவு மக்களோடு தற்காலிகமாக ஒன்றி வாழ்வதற்குரிய ஏற்பாடுகளை நிர்வாகம் செய்து கொடுத்துள்ளது.

வந்து சேர்ந்த தமிழர் ஒருவரின் வாக்குமூலம் இவ்வாறு உள்ளது:

"றெயுனியன் தீவுக்குப் போனால் பிரான்சுக்கு இலகுவாகச் செல்ல முடியும் என்ற முகவரின் சொல்லை நம்பியே இப்பயணத்துக்கு ஒத்துக் கொண்டேன்.

பயணமோ மிகுந்த ஆபத்தானது.....

இரவு பகல் என்று இடைவிடாது கப்பல் ஓடிக்கொண்டே இருக்கும்.

சிங்கள மாலுமிகள் ஆறு பேர் கப்பலை மாறி மாறி ஓட்டியிருந்தனர்.

சரியான உணவு தண்ணி ஏதும் பயணத்தின் போது இல்லை. குழந்தைகள் பலருடனேயே தமது கப்பல் பயணம் அமைந்திருந்தது.

பயணத்துக்கான பணத்தினை அறிவிட்ட கப்பல் முகவர் சிறிலங்காவிலேயே இருக்கின்றார்.

மொழிப்பிரச்சனை மட்டுமல்ல தனித்து விடப்பட்டவர்களாக இருக்கின்றோம்.

பயண முகவர்களின் ஆசை வார்த்தைகளை நம்பி இப்படி யாரும் பயணப்பட வேண்டாம்.

கடந்த சில மாதங்களுக்குள் எட்டு தடவைக்கு மேல் இலங்கையர்களுடன் அகதிக்கப்பல்கள் இத்தீவை தொட்டுள்ளன. அவ்வாறு வந்து சேர்ந்தவர்களில் பெரும்பாலானவர்கள் சிறிலங்காவுக்குத் திருப்பி அனுப்பப்பட்டு வருகின்றனர்.

கடந்த சில நாட்களுக்கு முன்னர் 60 பேர், கைகளில் விலங்கிடப்பட்டு காவல்துறையினரால் விமானத்தில் ஏற்றப்படும் காட்சி பிரெஞ்சு ஊடகங்களில் காண்பிக்கப்பட்டிருந்தது..

இதற்கு றெயுனியன் தீவு மனித உரிமைச்செயற்பாட்டாளர்கள் தமது கண்டனத்தினைப் பதிவு செய்துள்ளனர்.

கைகள் கட்டப்பட்ட நிலையில் பெரும் குற்றம் புரிந்தவர்கள் போல் விமானத்தில் ஏற்றப்பட்டதனை கடுமையாக இவர்கள் சாடுகின்றனர். உயிர்தஞ்சம் வேண்டி தீவை நோக்கி வந்து சேர்ந்தவர்களை அரவணைப்பது தொடர்பில் தீவு மக்களிடத்தில் ஒரு விவாதம் தேவை என அவர்கள் கோருகின்றனர்.




ஆனால் இதனை எதிர்ப்பவர்களும் காணப்படுகின்றனர்.

இவ்வாறு எல்லோரும் இங்கு வந்தால் நாம் எங்கே போவது என கூறுபவர்களும் இத்தீவில் உண்டு.

சிரியர்கள், லிபியர்கள் எனப் பலரும் இங்கு தஞ்சம் கோரினால் நிலைமையைக் கட்டுப்படுத்த முடியாது என குறிப்பிடுகின்றனர்.

இவ்வாறு றெயுனியன் தீவை நோக்கிய இலங்கையர்களது பயணம் பல்வேறு வாதப்பிரதிவாதங்களை ஏற்படுத்தியுள்ளது.

பல ஆயிரம் பணத்தினைக் கொடுத்து, பெருங்கனவுடனும் நம்பிக்கையுடனும் ஆபத்துக்களைக் கடந்து வந்த போதும், அது நிறைவேறாது பெருத்த ஏமாற்றத்துடன் திரும்பிச் செல்லுதல் (வலுக்கட்டாயமாக திருப்பி அனுப்பப்படுதல்) என்பது பெரும் கொடுமையானதாக உள்ளது.

இது தொடர்பில விழித்துக் கொள்ள வேண்டும் என்பதுதான் இப்பத்தியின் நோக்கமாகவுள்ளது.

## றெயுனியன் தீவு எங்கே உள்ளது?

இந்தியப் பெருங்கடலில் மடகஸ்காருக்கு வலதுபுறமாக இருக்கின்ற ஒர் சிறு தீவு. பிரான்சின் ஆட்புல நிர்வாக ஆளுகைக்குள் உள்ளது. பிரான்சின் சட்டங்களே இத்தீவுக்குப் பொருந்தும் என்றாலும், இத்தீவில் குடியேறுவதற்கு என தனிச்சட்டம் காணப்படுகின்றது.

இற்றைக்கு 400 ஆண்டுகளுக்கு முன்னர் இத்தீவை தனது ஆதிக்கத்துக்குள் வைத்திருந்த பிரான்ஸ், இத்தீவின் வளங்களில் ஒன்றான கரும்பை வெட்டுதவற்கு தமிழ்நாட்டில் இருந்து பல்லாயிரக்கணக்கான தமிழர்களை இங்கு "கூலி"களாக கொண்டு வந்திருந்தது.

அவ்வாறு வந்து சேர்ந்தவர்களின் தலைமுறையினர் சைவ சிறுதெய்வ வழிபாடுகளுடனும், திரிபுபெற்ற தமிழர் பெயர்களுடனும், தமிழ் மொழி பேசா, பிரெஞ்சுக்காரர்களாக இத்தீவில் வாழ்ந்து வருகின்றனர்.





## சிவா சின்னப்பொடி
**(அகதி சட்ட ஆலோசகர் – பிரான்ஸ்)**

ஒருவர் தனிநபராக கோருவதனைத்தான் அகதிதஞ்சமாக பார்க்கப்படும். பலர் கூட்டமாக ஒரு நாட்டின் எல்லைக்குள் கப்பல் மூலம் வந்து சேர்வதனை அத்துமீறாகவே அந்த நாட்டு அரசுகள் பார்க்கும். ஒரு வகையில் இதனை ஒரு குடியேறிகளின் ஆக்கிரமிப்பாகவே கருதும்.

இதனைத்தான் கனடாவின் கரை சேர்ந்வர்களாகட்டும், ஒஸ்ரேலியாவின் கரை சேர்ந்தவர்களாகட்டும் அனைவரையுமே குடியேற்றவாசிகளின் ஆக்கிரமிப்பு என்ற கோணத்திலேயே அந்த நாடுகள் அணுகியிருந்தன. நீண்ட காலத்தின் பின்னராகவும், நீண்ட இழுபறிகளுக்கு பின்னராகவும் அவர்களுக்கான அகதி தஞ்சத்தை கனடா வழங்கியிருந்தது. ஒஸ்ரேலியா தனது நாட்டுக்கு வெளியே வேறு ஒரு தீவில் கதவுகளை இழுத்து மூடியது.

இந்நிலையில் றெயுனியன் தீவை நோக்கி வந்தவர்களின் அகதி தஞ்சக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டு திருப்பி அனுப்பப்படுகின்றனர்.

அகதிகளுக்கான திணைக்களம் மத்திய பிரான்சில் இருக்கின்ற நிலையில், அகதிகளின் கோரிக்கை என்பது தீவு அதிகாரிகளாலும், காணொளி தொடர்பாடல் ஊடாகவும் பரிசீலனை செய்யப்படுவதும், உரிய மொழிபெயர்ப்பாளர்கள் இல்லாத நிலையும் இந்த நெருக்கடிக்கு ஒரு காரணமாக அமைகின்றன.

மத்திய பிரெஞ்சுக்கு உள்நுழையும் வகையில் றெயுனியன் தீவுக்குள் வருகின்ற அகதிகள் விடயத்தில் பிரெஞ்சு அரசு நெகிழ்வுத்தன்மையுடன் நடக்கும் என்பதனை எதிர்பார்ப்பதனை விட, கதவுகளை இறுகசாத்தும் என்பதே உண்மை.

# யாழ்ப்பாண நூல் நிலையமும் சிங்கள (Nazi) நாசிக்களும்!



38 ஆண்டுகளுக்கு முன்பு, நாகரிக உலகமே வெட்கித் தலைகுனியும் படியான கோரச் செயல் ஒன்றை, அன்றைய சிங்கள அரசு தமிழ் மக்களுக்குச் செய்தது.

1981ம் ஆண்டு யூன் மாதம் முதலாம் திகதி, தென் கிழக்காசியாவின் மிகச் சிறந்த நூல் நிலையங்களில் ஒன்றாகக் கருதப்பட்ட யாழ்ப்பாண நூல் நிலையம் தீக்கிரையாக்கப்பட்டது.

அன்று 97,000க்கும் மேற்பட்ட நூல்களும், கிடைத்தற்கரிய நூல்களும், சுவடிகளும் எரிந்து சாம்பலாயின. தமிழர்கள் தம்மில் ஒரு பகுதியை தாம் இழந்ததாக உணர்ந்து, உருகி, உறைந்து போயினர்.

தமிழீழ மக்களுக்கு மாறாத வலியையும், வடுவையும் தந்த இந்தக் கோரமான பேரழிவுக்கு அடிப்படையாக அமைந்த காரணிகளையும், வரலாற்று உண்மைகளையும் நாம் இங்கே ஆராய்ந்து பார்ப்பதோடு மட்டுமல்லாது, தேசிய இனங்களை ஒடுக்க முயன்ற பேரினவாத சர்வதேச அரசுகளின் செயல்களில் உள்ள ஒற்றுமைகளைச்சுட்டிக்காட்டித்தர்க்கிப்பதும் இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

இப்பேரழிவுச் செயல் நிகழ்த்தப்பட்ட 1981 யூன்மாதம்முதலாம்திகதிக்குமுதல்மேமாதம் 30ம் திகதி நடைபெற்ற விடயங்களையும் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

தென் கிழக்காசியாவின் மிகச்சிறந்த நூல் நிலையங்களில் ஒன்றாகக் கருதப்பட்ட யாழ்ப்பாண நூல் நிலையம், 1933ம் ஆண்டு K.M. செல்லப்பா என்ற அன்புள்ளம் கொண்ட தமிழர் தன்னுடைய இல்லத்தில், இலவச நூல் நிலையம் ஒன்றை ஆரம்பிப்பதன் மூலம் 'யாம் பெற்ற புலமைகளைப் பகிர்ந்து கொள்ள விரும்பும் நல்லெண்ணத்தைத்' தெரிவித்தார். செல்லப்பாவின் சிந்தனையை ஏற்றுக் கொண்ட பல அறிவு ஜீவித் தமிழர்கள், 1934ம் ஆண்டு யூன் மாதம் 9ம் திகதி ஒரு நூல் நிலையத்தை ஆரம்பித்தார்கள்.

அன்றைய நாட்களில் உயர்நீதிமன்ற நீதவானாக இருந்த ஐசாக் அவர்கள் தலைவராகவும், செல்லப்பா அவர்கள் செயலாளராகவும் இந்த நூல் நிலையக் குழுவினராகத் தெரிவு செய்யப்பட்டார்கள்.

இந்த நூல் நிலைய நிர்வாகக் குழுவினரின் அயராத உழைப்பின் காரணமாக, 1934ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் முதலாம் திகதியன்று, யாழ்ப்பாணம் ஆஸ்பத்திரி வீதியில் உள்ள ஒரு வாடகை அறையில் 844 புத்தகங்களுடனும், 30 செய்திப் பத்திரிகைகள், மற்றும் சஞ்சிகைகளுடனும் ஒரு நூல் நிலையம் உருவானது.

மிகவும்வயதுகுறைந்தஇளைஞர்களினதும், வயது முதிர்ந்த முதியவர்களினதும் ஆர்வம் காரணமாகவும், ஆதரவு காரணமாகவும் இந்த நூல் நிலையத்தின் நூல்களின் எண்ணிக்கை பல்கிப் பெருகியது.

1935ம் ஆண்டு ஜனவரி மாதம் யாழ்ப்பாணப் பிரதான வீதியில் உள்ள ஒரு வாடகைக் கட்டிடத்திற்கு இந்த நூல் நிலையம் இடம் பெயர்ந்தது.

1936ம் ஆண்டு யாழ் மகாநகராட்சி மண்டபம் நிர்மாணிக்கப்பட்டது. இந்த நூல் நிலையம், இதற்கு அருகாமையில் உள்ள கட்டிடத்திற்கு மீண்டும் இடம் பெயர்ந்தது.

அந்தக் காலத்திலேயே, இந்த நூல் நிலையத்துக்குரிய சந்தா மூன்று ரூபாய் ஆகும். ஆனால் அறிவுத் தாகம் கொண்ட தமிழர்களின் ஆர்வத்துக்கு ஈடு செய்ய முடியாத அளவில் இந்த நூல் நிலையம் திணற வேண்டிய நிலை ஏற்பட்டது. இந்த நூல் நிலையம் விரிவாக்கப்பட வேண்டிய அவசியத்துடன் ஒரு நிரந்தரமான பாரிய கட்டிடம் ஒன்று அமைக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் எமது (அன்றைய) தமிழ் மக்கள் உணர்ந்தார்கள்.

அப்போது யாழ் மாநகரசபை முதல்வராக இருந்த சாம் சபாபதி அவர்களின் தலைமையில் பல நிதி சேகரிப்பு நிகழ்ச்சிகள் நடாத்தத் திட்ட மிடப்பட்டன. குதூகலவிழா (carnival), இந்தியக் கலைஞர்களின் கலைநிகழ்ச்சி விழாக்கள், நல்வாய்ப்புச் சீட்டுக்கள் (Lottery Tickets) போன்றவற்றின் மூலமாக நிதி சேகரிப்பு நிகழ்ச்சிகள் நடாத்தப்பட்டன. எதிர்பார்த்ததையும் விட ஏராளமான தொகை திரட்டப்பட்டது.

1953ம் ஆண்டு, நூல் நிலையத்திற்கான நிர்வாகக்குழு ஒன்று தெரிவு செய்யப்பட்டது. வணக்கத்துக்குரிய பிதாலோங் (Long) அவர்கள் இந்த நிர்வாகக்குழுவினால் தெரிவு செய்யப்பட்டிருந்தார். அன்னாரின் சிலை ஒன்று பிற்காலத்தில், யாழ்ப்பாண பொதுசன நூல் நிலையத்தில் நிர்மாணிக்கப்பட்டது.

1981ம் ஆண்டு யூன் முதலாம் திகதி, சிங்களக் காவல்துறைக் காடையர்களால், நூல் நிலையம் தீக்கிரையாக்கப்பட்ட போது, வணக்கத்துக்குரிய பிதாலோங் அவர்களுடைய சிலையும் அக்காடையர்களால் சிரச்சேதம் செய்யப்பட்டது.

1953ம் ஆண்டுமார்ச்மாதம்29ம்திகதியன்று, இந்த நூல் நிலையத்திற்கு அத்திபாரம் இடப்பட்டது. திராவிடக் கட்டடக்கலை நிபுணரான கே.எஸ்.நரசிம்மன் அவர்களைச் சென்னையிலிருந்தும், பேராசிரியர் இரங்கநாதன் அவர்களை டெல்லியிலிருந்தும், நூல் நிலைய நிர்வாகக்குழு அழைத்து ஆலோசனைகளையும், அறிவுரைகளையும் பெற்றது. முதல் கட்டப்பணிகள் 1959ம் ஆண்டு ஒக்டோபர் மாதம் 11ம் திகதி நிறைவு பெற்றன. சிறுவர்களுக்கான பகுதி ஒன்று 1967ம் ஆண்டு நவம்பர் மாதம் 3ம் திகதி ஆரம்பிக்கப்பட்டது. 1971ம் ஆண்டில், நூல் நிலையத்தின் முதல் மாடியில் கூட்டங்கள் நடாத்துவதற்காக மண்டபம் ஒன்றும் நிர்மாணிக்கப்பட்டது.

இப்படிப்பட்ட கட்டிடமும், 97,000றக்கும் மேற்பட்ட அரிய நூல்களும், பழைய முக்கியமான சஞ்சிகைகளும் 1981ம் ஆண்டு யூன் மாதம் முதலாம் திகதியன்று சிங்களப் பேரினவாதிகளால் தீக்கிரையாக்கப்பட்டன.

1981ம் ஆண்டு மே மாதம் 30ம் திகதி, நாச்சிமார் கோவிலடியில் நடைபெற்ற, தமிழர் விடுதலைக் கூட்டணித் தேர்தல் கூட்டத்தின் போது நடாத்தப்பட்ட துப்பாக்கி பிரயோகத்தின் போது ஒரு சிங்களப் பொலிஸ் கொல்லப்பட்டார். இதனை அடுத்து துரையப்பா ஸ்டேடியத்தில் நிலை கொண்டிருந்த சிங்களப் பொலிசார் 'சுப்பையா & சன்ஸ்'; கடை உட்படப் பல கடைகளை உடைத்தும், எரித்தும், கொள்ளையிட்டும் அடாவடித் தனங்களில் இறங்கினர். நாச்சிமார் கோவில் தேருக்கு தீ மூட்டும் முயற்சிகளும் மேற் கொள்ளப்பட்டன. பல பொது மக்களின் வீடுகள் உடைத்து நொறுக்கப்பட்டன. தமிழர் கூட்டணியின் கட்சிச் செயலகம் தீயிடப்பட்டது. யாழ்ப்பாணப் பாராளுமன்ற உறுப்பினர் யோகேஸ்வரனின் வீடும், வாகனமும் தீக்கிரையாக்கப்பட்டன.

இதற்கு அடுத்த நாள் நள்ளிரவு யாழ் நூல் நிலையத்தின் மூன்றாவது மாடி தீப்பிடித்து எரிய ஆரம்பித்தது. இந்த மூன்றாவது மாடியில்தான் கிடைத்தற்கு அரிய சுவடிகளும், மிக அரிய நூல்களும் இருந்தன. மிக விரைவில் நூல் நிலையத்தின் சகல பகுதிகளுக்கும் தீபரவியது.

யாழ் நூல் நிலையக் கட்டடத்தை மிக நன்றாகப் புரிந்து கொண்டு, அதனை முழுமையாக நாசமாக்கும் விதத்தில், நன்கு திட்டமிடப் பட்டே இப்பேரழிவு நடாத்தப்பட்டது. அன்றைய தினம் நடாத்தப்பட்ட கோர தாண்டவத்தில், ஈழ நாடு பத்திரிகைக் கட்டிடம் உட்பட முக்கியமான புத்தகக் கடைகளும் எரிக்கப்பட்டமை இங்கு குறிப்பிடத்தக்கது. யாழ்ப்பாணம் பெரிய கடை வீதியில் அமைந்திருந்த தமிழ்ப் புலவர்களின் சிலைகளும் சேதமாக்கப்பட்டன.

தமிழரின் பண்பாட்டு அடையாளங்கள் என்று கருதப்பட்ட விடயங்கள் மீதே சிங்களப் பேரினவாதிகள் தமது அழிவுத் தாக்குதல்களை நடாத்தினார்கள் என்பதில் ஐயமில்லை.

"தமிழர்களுக்கு ஒரு பாடம் படிப்பிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் தமிழர்கள் படிக்கின்ற நூல்கள் அன்று தீக்கிரையாக்கப்பட்டன."

அன்றைய சிங்கள அரசினால் திட்டமிட்டுச் செயல்படுத்தப்பட்ட இந்த நாசகாரச் செயலை முன்னெடுக்கவும், கண்டுகளிக்கவும் இரண்டு சிங்கள அமைச்சர்கள் யாழ்ப்பாணத்திற்கு வந்தமையாகச் சொல்லப்பட்டது. ஒருவர் சிறில் மத்தியூ. மற்றவர் காமினி திசநாயக்கா!

"குடித்து வெறித் திருந்த சில பொலிஸ்காரர்கள் தாமாகவே திருட்டுச் செயல்களைப் புரிந்தார்கள்" என்று அரசு தரப்பில் வியாக்கியானம் வேறு கொடுக்கப்பட்டது. திருடுகின்றவர்கள் தமக்கு ஆதாயம் தரக்கூடிய பொருட்களைத்



திருடுவார்கள். நூல்களையாளரிப்பார்கள்.?

இந்தப் பண்பாட்டு அழிப்பினைத் தொடர்ந்து நடந்த அல்லது நடக்காத விடயங்கள் சில படிப்பினைகளைத் தந்தன. நூல் நிலைய அழிப்பு குறித்து உத்தியோக பூர்வ விசாரணைகள் எதையும் சிங்கள அரசு நடாத்தவில்லை. அன்றைய தினம் யாழ்ப்பாணத்தில் தங்கியிருந்த அந்த இரண்டு அமைச்சர்களுக்கும் எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானம் ஒன்றைப் பின்னர் பாராளுமன்றத்தில் எதிர்க் கட்சித் தலைவரான அமிர்தலிங்கம் கொண்டு வர முயன்ற போது, சிங்கள அரசு அவருக்கு எதிராகவே நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்தது.

சிங்களப் பாராளுமன்றத்தின் ஊடாக தமிழர்களுக்கு எந்த விதமான நீதியோ, நியாயமோ கிடைக்கப் போவதில்லை என்ற உண்மை மீண்டும் ஒரு முறை நிரூபணமாகியது.

இதன் பின்னனியில் தான் சிங்களப் பேரினவாத அரசியல் சட்டங்களுக்கும், ஹிட்லரின் நாசிச் (NAZI – NATIONAL Socialist Party of Germany) சட்டங்களுக்கும் இடையே உள்ள ஒற்றுமைகளைத் தர்க்கிக்க விழைகின்றோம். சட்டங்கள் மட்டுமல்ல, அவையினூடாக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளும் கருத்தில் கொள்ளப்பட வேண்டியவையாகும்.

1935ம் ஆண்டு, செப்டெம்பர் மாதம், 10ம் திகதி நியூரம் பெக், ஜேர்மனியில் நடைபெற்ற நாசி மகாநாட்டில் சட்டமாக்கப்பட்ட

தொடர்ச்சி 12 ஆம் பக்கம்...

# சாதியவாதிகளை இனம் காண்பது எப்படி?

ஈழத்தில் சாதியக் கொடுமைகள் இல்லை அல்லது மிகக் குறைவு என்பது பெரும்பாலான ஈழத் தமிழ் உயர்குடிகளின் வாதம். முப்பது ஆண்டுகால ஈழப் போராட்டம் சாதியத்தை பொதுவில் வெளிப்படுத்துவதை முடிந்தளவு கட்டுப்படுத்தி வைத்திருந்தது. இதன் அடிப்படையில் ஈழத்தில் சாதிக் கொடுமைகள் அழிந்து விட்டன என்று சிலர் அடம்பிடிக்கிறார்கள்.

உண்மையில் இன்றைக்கும் சாதிக் கொடுமைகள் தமிழீழத்தின் எல்லாப் பிரதேசங்களிலும் உண்டு. தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் போது, அடங்கிக் கிடந்த சாதியம் தன்னுடைய கோரமுகத்தை இன்று பல ஊர்களில் காட்டுகின்றது. தமிழீழ விடுதலைப் போராட்டத்தால் சாதியத்தை இல்லாமல் செய்து விட முடியவில்லை. வெளிப்படையான செயற்பாடுகள் இல்லாமல் இருந்ததே தவிர, சாதியம் பலருடைய மூளைக்குள் அப்படியேதான் இருந்திருக்கிறது.

ஈழத் தமிழர்களுடன் சாதியம் பற்றி உரையாடுகின்ற போது, அவர்களின் பதிலில் இருந்து அவர்கள் சாதிய சிந்தனை உள்ளவர்களா இல்லையா என்பதை இலகுவாக கண்டு பிடித்து விடலாம்.

சாதி ஐரோப்பியர்களிடமும் இருக்கிறது" என்று தொடங்கி சில ஆதாரங்களை அடுக்குவார்கள். உன்னிடம் இருக்கின்ற சாதியத்தை ஒழிக்க என்ன செய்யலாம் என்று கேட்டால், அது அங்கே இருக்கிறது, இங்கே இருக்கிறது, அது இயல்பானது" என்பது போன்று பதில் தருவார்களே தவிர, தன்னுடைய சாதி நிலைப்பாடு பற்றி வெட்கப்பட மாட்டார்கள்.

உயர்குடியினர் மட்டுமா சாதி பார்க்கிறார்கள், தாழ்த்தப்பட்ட மக்களிடமும் சாதியம் இருக்கிறது, அந்த சாதி இந்த சாதியை ஒடுக்கிறது" என்றெல்லாம் விளக்கம் தரத் தொடங்குவார்கள். சாதியம் மிக வலுவாக இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேல் தொடர முடிவதற்கே, இப்படி ஒன்றில் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்ற ஏணிப்படி முறைதான் காரணம். ஒவ்வொரு சாதிக்கும் கிழே ஒன்று அல்லது ஒன்றிற்கும் மேற்பட்ட சாதிகள் வைக்கப்பட்டிருக்கும். இல்லையெனில் அடக்கப்படுகின்ற எல்லாச் சாதிகளும் ஒன்றுபட்டு நிற்கும். மேல்ச் சாதியினரால் மற்றைய சாதிகள் மீது அடக்குமுறையை செய்ய முடியாது போகும். சாதிய அடக்குமுறைகளை இலகுவாக நடைமுறைப்படுத்துவதற்காக மிகத் திறமையாக செய்யப்பட்டிருக்கின்ற ஏற்பாடுதான் இந்த ஏணிப்படி முறை. ஆனால் சாதியவாதிகளோ எல்லாச் சாதிகளுக்கும் ஏற்றத் தாழ்வு உண்டு என்று சொல்லி, தன்னுடைய சாதியினர் செய்கின்ற அடக்குமுறைகளை சாதரணமானதாக காட்ட முனைவார்கள்.

சாதி இப்பொழுது திருமணத்தில் மட்டும்தான் பார்க்கிறார்கள் என்று ஒரு தரப்பினர் ஆரம்பிப்பார்கள். திருமணத்தில் சாதி பார்க்கின்ற இந்த அகமண முறைதான் சாதியை கட்டிக்காத்து வைத்திருக்கின்றது. சாதி பார்க்காமல் திருமணம் செய்யத் தொடங்கினால், எல்லாச் சாதியினரும் ஒன்றாகி, சாதி என்பதே இல்லாமல் போய் விடுமே. எங்கே சாதி பார்த்தால், சாதிய வேறுபாடுகள் அப்படியே இருக்குமோ, அதை அப்படியே செய்து கொண்டு, திருமணத்தில் மட்டும்தான் சாதி பார்க்கிறோம்" என்று அப்பாவி போல் முகத்தை வைத்துக் கொண்டு சொல்வார்கள்.

இவர்கள் எல்லோரையும் விட மாபெரும் அயோக்கியர்கள் சிலர் இருக்கிறார்கள். சாதியத்தை பற்றிப் பேசமால் இருந்தாலே, சாதி அழிந்து விடும்" என்று சொல்லி, சாதியத்திற்கு எதிராக பேசுபவர்களின் வாயை அடைப்பதற்கு பதறியடித்துக் கொண்டு ஓடி வருவார்கள். சாதிக் கொடுமைகள் தொடர்ந்தாலும், அது பற்றி ஒன்றும் பேசக் கூடாது, அமைதியாக இருக்க வேண்டும், சாதியை எதிர்ப்பவர்கள்தான் பிரச்சனைக்கு உரியவர்கள் என்பது போன்ற ஒரு கருத்துருவாக்கத்தை பல மட்டங்களில் இவர்கள் பரப்பியிருக்கிறார்கள். மிக மோசமான சாதி வெறியர்கள் இவர்கள்தான்.

ஈழத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் கோயிலில் தேர் இழுக்கக் கூடாது என்று இராணுவத்தினரைக் கொண்டு தேரை இழுக்கிறார்கள். வரணியில் உள்ள ஆலயத்தில் கனரக இயந்திரத்தைக் கொண்டு தேரை இழுத்தார்கள். அதற்கு எதிராக சில குரல்கள் எழுந்த பொழுது, சாதியத்திற்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை என்று மழுப்பினார்கள். இந்த ஆண்டு சாதிய வேறுபாடு இன்றி அனைவரும் தேர் இழுக்க வேண்டும் என்று கேட்டதனால், திருவிழாவையே நிறுத்தி விட்டார்கள்.

இன்னும் பல நூற்றுக் கணக்கான ஆலயங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் உள்ளே நுழைய அனுமதியில்லை. அவர்களுடைய திருவிழா என்று ஒரு நாளை ஒதுக்கினாலும், சாமி தூக்க விட மாட்டார்கள். தேர் இழுக்க விட மாட்டார்கள். சாதிய ஏற்றத்தாழ்வுகளுக்கு இந்து மதம் தத்துவ விளக்கம் கொடுத்து, அதைக் காத்து நிற்பதால், கோயில் விடயத்தில் சாதியத்தை இறுக்கமாக பேணுகிறார்கள்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அரசியலிலும் பிரதிநிதித்துவம் இல்லாத ஒரு நிலை அங்கே உள்ளது. தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் மாகாண சபை உறுப்பினர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்களில் எத்தனை பேர் தாழ்த்தப்பட்ட சமூகத்தை சேர்ந்தவர்கள் என்று விசாரித்துப் பார்த்தால், அந்த மக்களுக்கு இழைக்கப்பட்டுள்ள அநீதி விளங்கும். தாழ்த்தப்பட்ட மக்கள் அதிகமாக வாழ்கின்ற ஊர்களில் இருந்தும் உயர்சாதியை சேர்ந்தவர்களே உள்ளூராட்சித் தேர்தலில் வேட்பாளர்களாக நிறுத்தப்படுகிறார்கள்.

இத்தனைக்கும் விடுதலைப் புலிகள் இயக்கத்தின் முக்கிய தளபதிகளாகவும், நிர்வாகிகளாகவும் தாழ்த்தப்பட்ட சமூகத்தை சேர்ந்தவர்களே அதிகம் இருந்திருக்கிறார்கள். தமிழீழ நிழல் அரசை மிகத் திறமையாக அவர்கள் நிர்வாகித்திருக்கிறார்கள். தலைவர் பிரபாகரனின் கண்ணுக்கு தெரிந்த இந்தத் திறமைசாலிகள் இன்றைய அரசியல்வாதிகளின் கண்களுக்கு ஏன் தெரியவில்லை?

சாதி மறுப்புத் திருமணம் செய்த முன்னாள் போராளிகள் இன்றைக்கும் குடும்பத்தாலும் சமூகத்தாலும் ஒதுக்கப்பட்டுள்ளார்கள். உளவியல்ரீதியாக மிகப் பெரிய வன்முறை அந்தப் போராளிகள் மீது கட்டவிழ்த்து விடப்பட்டுள்ளது.

இன்று வரை முன்னாள் போராளிகளால் தமிழர் தாயகத்தில் வலுவான அரசியல் செயற்பாடுகளை செய்ய முடியாது இருப்பதற்கு, சிங்களப் பேரினவாதத்தின் அச்சுறுத்தல் மட்டும் காரணம் இல்லை. தமிழர் தாயகத்தின் கட்சி அரசியலில் பெரும் செல்வாக்குச் செலுத்தி வரும் யாழ்ப்பாணிய வேளாள சிந்தனையானது தாழ்த்தப்பட்ட சமூகத்தினரையும் உள்ளடக்கியவர்களாகத் திகழ்கின்ற இந்தப் போராளிகளை அரசியல் சக்தியாக வளர ஒரு போதும் அனுமதிக்காது என்பதே முதன்மையான காரணம்.

இவ்வாறு பல்வேறு வடிவங்களில் சாதிய அடக்குமுறைகள் ஈழத்தில் தொடர்கின்ற போது, அதைப் பற்றி ஒன்றும் பேசக் கூடாது என்று சொல்வது எவ்வளவு பெரிய அயோக்கியத்தனம்? சாதிய அடக்குமுறைகளை நடைமுறைப்படுத்திக் கொண்டே, இன்றைக்கு சாதி இல்லை, அதைப் பற்றிப் பேசி, சாதி பற்றித் தெரியாதவர்களுக்கும் சாதியை சொல்லிக் கொடுக்கக் கூடாது என்று தலையில் தேங்காய் அரைக்கின்ற மோசடிப் பேர்வழிகள் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும்.

தாழ்த்தப்பட்ட மக்கள் படிக்கக் கூடாது, மேற்சட்டை அணியக் கூடாது, உயர்சாதியினருக்கு அடிமைச் சேவகம் செய்ய வேண்டும், கல்வீடு கட்டக் கூடாது, வேறு தொழில்கள் செய்யக் கூடாது, விரும்பிய பெயர்களை வைக்கக் கூடாது என்றெல்லாம் மிகக் கொடுமையாக இருந்த சாதிய அடக்குமுறைகள் பின்னர் எப்படி குறைந்தன? சாதிக் கொடுமைகள் பற்றி பேசாமல் இருக்க தன்பாட்டில் சாதிக் கொடுமைகள் குறைந்தனவா?

60களில் சாதியக் கொடுமைகளுக்கு எதிராக தாழ்த்தப்பட்ட மக்களும், சாதி எதிர்ப்பாளர்களும் ஆயுதம் ஏந்திப் போராடினார்கள். சாதிய அடக்குமுறைகளுக்கு எதிராக பெரும் பரப்புரைகளைச் செய்து விழிப்புணர்வுகளை ஏற்படுத்தினார்கள். இதனால் சில கொடுமைகள் குறைந்தன. பின்னர் ஈழப் போராட்டத்தின் போது, சாதியத்தின் பெயரில் சக மனிதரை தூற்றியவர்கள் தண்டனைக்கு உள்ளாக்கப்பட்டார்கள். ஆயுதம் ஏந்திப் போராடியும், பரப்புரை செய்தும், தண்டனை வழங்கியுமே சாதிவெறிக் கொடுமைகள் ஈழத்தில் குறைக்கப்பட்டன.



இப்பொழுது கேட்பதற்கு யாரும் இல்லை என்கின்ற துணிவில் ஆட்டம் போடுகின்ற சாதியத்தைப் பார்த்துக் கொண்டு பேசாது இருக்க வேண்டும் என்று போதிப்பவர்கள் எவ்வளவு பெரிய அயோக்கியர்கள் என்பதை அறிவுள்ளவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தமிழர்கள் சுயநிர்ணய உரிமை, போர்க்குற்றம் என்று எதுவும் பேசாது இருந்தால், இலங்கையில் பிரச்சனை எல்லாம் தீர்ந்து, எல்லோரும் நிம்மதியாக வாழலாம் என்று பேசுகின்ற சிங்களப் பேரினவாதிகளுக்கும் இவர்களுக்கும் என்ன வித்தியாசம்?

பேசாது இருந்தால் எதுவும் மாறாது. நடப்பது எந்தத் தயக்கமும் இன்றி மேலும் மேலும் நடக்கும். சாதியத்திற்கு எதிரான கருத்துக்களைப் பரப்பி, விழிப்புணர்வை ஏற்படுத்துவதன் மூலமே சாதியத்தை ஒழிக்க முடியும்.




ஒரு கிராமத்தில் இராமசாமி என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் வீட்டுத் தோட்டத்தில் ஒரு முருங்கை மரம் இருந்தது. வாரம் ஒரு முறை முருங்கைக் காய்களைப் பறித்து, பையில் நிரப்பி தோளில் வைத்துக் கொண்டு ஒன்பது கிலோமீட்டருக்கு அப்பால் இருக்கும் பட்டணம் வரை நடந்து சென்றே ஒவ்வொரு நாளும் ஒரு மளிகைக் கடையில் விற்றுவிட்டு வருவது வழக்கம்

முருங்கைக் காயைக் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக அரிசி, பருப்பு, சர்க்கரை போன்ற வீட்டுக்குத் தேவையான பொருட்களை வாங்கி வருவார்!

இராமசாமி கொண்டுவரும் முருங்கைக்காயின் சுவை அந்த பகுதி மக்களிடையே மிகவும் பிரபலம்!

இதைப் பயன்படுத்தி மற்ற முருங்கைக்காயோடு கலந்து மளிகை கடைக்காரரும் நல்ல லாபம் சம்பாதித்து விடுவார்!

பல ஆண்டுகளாக இராமசாமி முருங்கைக்காய் கொண்டுவருவதால் மளிகை கடைக்காரர் அதை எடை போட்டுப் பார்த்ததில்லை. இராமசாமி சொல்கின்ற எடையை அப்படியே நம்பி அதற்கு ஈடான மளிகைப் பொருட்களைக் கொடுத்து அனுப்புவர்!

காரணம் இராமசாமியின் நேர்மையும் நாணயமும் எல்லோரும் அறிந்தது!

ஒரு நாள் இராமசாமி வழமைபோல பத்துக் கிலோ முருங்கைக்காயைக் கொடுத்துவிட்டு அதற்கான பொருட்களை வாங்கிச்சென்றார்.... சிறிது நேரத்திலே பத்துக் கிலோ முருங்கைக்காய் மொத்தமாய் வேண்டும் என்று ஒரு சமையல்காரர் வந்து கேட்க, அவருக்காக மளிகைக்காரர் எடைபோட, அதில் ஒன்பது கிலோ மட்டுமே இருந்தது!

அன்று முழுவதும் மளிகைகாரருக்கு தூக்கமே வரவில்லை! இராமசாமி மீது எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தோம்;

இவ்வளவு பெரிய நம்பிக்கை துரோகத்தை செய்துவிட்டாரே!

இத்தனை ஆண்டுகளாக இப்படி முட்டாள்தனமாக எடை குறைவான முருங்கைக்காயை வாங்கி ஏமாந்து விட்டோமே! அடுத்த முறை இராமசாமி வந்தால் சும்மா விடக்கூடாது என்று கடுங்கோபத்தில் இருந்தார்! மறுநாள் இராமசாமி வந்தார். கையும் களவுமாகப் பிடிக்கவேண்டும் என்று, எத்தனை கிலோ என்று மளிகைக்காரர் கேட்க பத்து கிலோ என்றார் இராமசாமி.

அவர் முன்னாலேயே எடைபோட்டுப் பார்க்க ஒன்பது கிலோ தான் இருந்தது. வந்த கோபத்தில் மளிகைக்காரர் பளார்,பளார் என இராமசாமியின் கன்னத்தில் அறைந்தார்!

இத்தனை ஆண்டுகளாக இப்படித்தான் ஏமாத்திட்டு இருக்கியா? கிராமத்துக்காரங்க ஏமாத்த மாட்டாங்கன்னு நம்பித் தானே எடை போடாம அப்படியே வாங்கினேன்,

இப்படி துரோகம் பண்ணிட்டியே சீய் என ஏசினார். நிலைகுலைந்து போனார் இராமசாமி. ஐயா...என்னை மன்னிச்சிடுங்க. நான் ரொம்ப ஏழை, எடைக்கல்லு வாங்குற அளவுக்கு என்கிட்ட காசு இல்லீங்க..

ஒவ்வொரு முறையும் நீங்க கொடுக்கிற ஒரு கிலோ பருப்பை ஒரு தட்டுலயும், இன்னொரு தட்டுல முருங்கைக்காயையும் வச்சி தான் எடைபோட்டுக்கொண்டுவருவேன். இதைத் தவிர வேற எதுவும் தெரியாதுங்கய்யா, என்று காலை பிடித்துக் கெஞ்சினார். மளிகைக்காரருக்கு செருப்பால் அடித்தது போல் இருந்தது....

தான் செய்த துரோகம் தனக்கே வந்ததை உணர்ந்தார்! இத்தனை ஆண்டுகளாக இராமசாமியை ஏமாற்ற நினைத்த மளிகைக்காரரும்...

அவருக்கே தெரியாமல் ஏமாந்து கொண்டுதான் இருந்திருக்கிறார் என்பது தெளிவானது!

இது தான் உலகநியதி!
நாம் எதைத் தருகிறோமோ
அதுதான் நமக்கு திரும்ப வரும்.
நல்லதை தந்தால் நல்லது வரும்,
தீமையை தந்தால் தீமை வரும்!

வருகின்ற காலங்கள் வேண்டுமானால் தாமதமாகலாம், ஆனால் நிச்சயம் வரும்!

ஆகவே நல்லதை மட்டுமே தருவோம், நல்லதை மட்டுமே விதைப்போம்!

மனிதன் எதை விதைக்கிறானோ அதையே அறுப்பான்!

தீதும் நன்றும் பிறர் தர வாரா!

# SOUTHERN AROMA

## WHAT WE HAVE


APPETIZERS


ENTREES


CURRIES


DOSA


BREAD

OUR HOURS:

Monday-Thursday:
11AM - 3PM • 5PM - 10:30PM

Friday - Saturday:
11AM - 3PM • 5PM - 11PM

Sunday:
11AM - 3PM | 5PM - 10:30PM

#14 - 7200 MARKHAM RD. MARKHAM, ON L3S 3R7

**(905) 554-2255**

contact@southernaroma.ca

11-ஆம் பக்க தொடர்ச்சி

சில விடயங்கள் பின்னாளில் அதாவது 1948, 1949களில் சிறிலங்கா அரசால் சட்டமாக்கப்பட்டன. (உதாரணம் - குடியுரிமைச் சட்டம் - இலங்கை).

நூல்களை எரிக்கின்ற திருவிளையாடல்களையும், நாசிக்கள் எப்போதுமே புரிந்து வந்திருக்கிறார்கள்.

1930களில் யூத மக்களின் நூல்களை, வீதியோரங்களில், பகிரங்கமாக நாசிக்கள் எரித்து வந்தனர்.

1933ம் ஆண்டு, மே மாதம் 10ம் திகதியன்று, ஹிட்லரின் பிரச்சார அமைச்சரான கோயபல்சின் உத்தரவின் பிரகாரம், பேர்லின் நூல் நிலையத்திற்குச் சென்ற நாசிக்கள், அங்கிருந்த சகல நூல்களையும் எரித்தார்கள். ஒரே ஒரு வித்தியாசம் தான்! சிங்களக் காடையர்கள் செய்தது போல, அவர்கள் (நாசிக்கள்) பேர்லின் நூல் நிலையத்தை எரிக்கவில்லை.

யூத மக்கள் மீது ஜேர்மன் இராணுவத்தினரால் நடாத்தப்பட்ட தாக்குதல்களையும், கொலைகளையும் கோயபல்ஸ் இவ்வாறு தான் நியாயப்படுத்தி வந்தார்.

"ஏதோவொரு திடீர் உணர்ச்சி வேகத்தில் சிந்திக்காமல், திட்டமிடாமல், இவ்வாறான செயல்களைப் போர் வீரர்கள் புரிந்துவிட்டார்கள்." நாசிக்களின் இதே காரணத்தைத் தான், சகலசிங்கள அரசுகளும் இது வரை சொல்லி வருகின்றன.

ஆப்கானிஸ்தானின் அன்றைய தாலிபான் அரசு மிகப்பழைமை வாய்ந்த புத்த சிலைகளை அழிக்க முனைந்த போது, பண்பாட்டு மேன்மை குறித்து புத்தபிக்குகள் கொழும்பில் ஆர்ப்பாட்டங்களை நடாத்தினார்கள். அன்றைய பிரதமர் ரட்ன சிறிவிக்கிரம நாயக்கா பாகிஸ்தானுக்குப் பறந்தோடிச் சென்று புத்தசிலை அழிப்பை



தவிர்ப்பதற்குப் பாகிஸ்தானின் உதவியை நாடினார். கொழும்பு ஊடகங்கள் இதனை முன்னிலைப்படுத்தின.

ஆனால் விலைமதிப்பற்ற யாழ் நூல் நிலையம் எரிக்கப்பட்ட போது மௌனம் தான் மொழியாகிற்று!

சுதந்திரம் பெற்ற நாடுகள் தமக்கு, தமது நாட்டுக்கு, தமது பண்பாட்டுக்கு ஏற்பட்ட அழிவுகளை வரலாற்று ரீதியாக நினைவு கூருவதற்காக மிக முக்கியமான அழிவுகளை ஞாபகப்படுத்தும் சின்னங்களைப் பாதுகாத்து வருவதை நாம் உலகளாவிய ரீதியில் காணக் கூடியதாக உள்ளது. அப்படிப்பட்ட நினைவுச் சின்னமும் இப்போது எமக்கு இல்லை.

ஆயினும், வரலாறு மீண்டும் மீண்டும் ஒரு விடயத்தை, ஒரே ஒரு விடயத்தை சுட்டிக்காட்டியே வந்திருக்கின்றது. சிங்களப் பௌத்தப் பேரினவாத அரசுகளிடமிருந்து தமிழ் மக்களுக்கு நீதியான, நேர்மையான, நிரந்தரமான, நியாயமான, கௌரவமான சமாதானத் தீர்வு ஒரு போதும் கிடைக்கப் போவதேயில்லை.

# யாழ்ப்பாணப் பொது நூலகம் அன்றும் இன்றும் நூல் வெளியீடு



யாழ்ப்பாணம் பொது நூலகத்தின் முன்னாள் நூலகர் திருமதி ரூபா நடராஜா எழுதிய யாழ்ப்பாணப் பொதுநூலகம் அன்றும் இன்றும் நூல், யாழ் நூலகம் எரியூட்டப்பட்ட நாளான ஜூன் 1ம் திகதி இலண்டன் ஈலிங் சிறி கனகதுர்க்கை அம்மன் ஆலயமண்டபத்தில் நடைபெற்றது.

யாழ்ப்பாணப் பொது நூலகம் சிறிலங்கா அரச படையினரால் எரிக்கப்பட்டு 38 ஆண்டுகள்



நிறைவடைந்துள்ள காலகட்டத்தில் நூலகம் எரியூட்டப்பட்ட காலப் பகுதியிலும் நூலகர் பணியில் இருந்த ரூபாநடராஜா தனது அனுபவங்களையும் நூலில் பதிவு செய்துள்ளார்.

நூல் வெளியீட்டு விழாவுக்கு வைத்தியக் கலாநிதி பகீரதன் அமிர்தலிங்கம் அவர்கள் தலைமை தாங்கினார்.



நூலகத்தினுடனான தனது அனுபவத்தை சிறப்பாக வெளிப்படுத்தினார்.

நூலகம் தொடர்பான அன்றைய இன்றைய தகவல்களை விழாவில் கலந்து கொண்டு உரையாற்றியவர்கள் தெரிவித்தனர்.

அன்று 97 ஆயிரம் நூல்கள் தீக்கிரையானது. இன்று 2 இலட்சத்து 50 ஆயிரம் நூல்கள் இருக்கின்றன. வாசகர்கள் தான் மிகக் குறைவாக இருக்கிறார்கள் எனத் தெரிவித்தார்கள்.



திருமதி. வாசுகி முருகதாஸ் வரவேற்புரை வழங்கினார்.

மு.மாசிலாமணி, கலாநிதி மு.நித்தியானந்தன், நூலகவியலாளர் என். செல்வராஜா, தமிழறிஞர் சிவாபிள்ளை, முன்னாள் நூலகர் ஆர்.எஸ்.தம்பையா, பத்திரிகையாளர் மகாலிங்கசிவம், சட்டத் தரணி ரட்ணசிங்கம், எழுத்தாளர் மாதவி சிவலீலன் ஆகியோர் உரையாற்றினர். நூலாசிரியர் ரூபாநடராஜா ஏற்புரைவழங்கினார்.

# நம்பி வாங்க தம்பி பிரபாவிடம்
# திரும்பி சந்தோசமா போங்க

## தம்பி பிரபா
## 416 645 3027

வீட்டுக்கடன்
வாங்க உங்கள்
**CREDIT SCORE** இனி
தடை இல்லை.
வீட்டை வைத்து
இலகுவாக
கடன் பெறலாம்

அதி குறைந்த
வட்டி வீதத்தில்
ஆரம்பித்து
**OVER MILLION**
**DOLLAR** வரை
கடன்
பெற்றுக்கொள்ளலாம்

காசோலைக்கு பணம்
வழங்கும் சேவை
**BUSINESS CHEQUE**
**CASHING**

மாறி வரும்
சட்டதிட்டங்களுக்கு
அமைய வீட்டுக்கடன்
செய்துகொடுப்பது
எமது கடமை

---




FUNERAL HOME
& CREMATION CENTRE

# Serving the Tamil Community

## OF GREATER TORONTO

உங்கள் உறவொன்றை பிரிந்து
தடுமாறும் வேளையில் இறுதி நிகழ்வுகள்
பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம்.
அனுபவத்துடன் கூடிய அன்பான
சேவையை வழங்குகின்றோம்.

## *At Need Funeral Arrangements*

We provide a full range of service to families who have experienced a loss of a loved one, including:

- *Vistation*
- *Funeral & Memorial Service*
- *Reception*
- *Burial*
- *Cremation*



**Vilosanan Sivatharman**
416-993-0826



**Christeen Seevaratnam**
416-258-6759

மார்க்கம், மற்றும் மிசிசாகா
நகரங்களில் எமது சேவை

இறுதிச் சடங்கை நடத்துவதற்கான செலவை முன்கூட்டியே திட்டமிடலாமா?

## *Pre-Arranging: A Wise Choice...*

**FINANCIAL BENEFITS**

- Lock in the cost at today's prices
- Convenient time payments
- Insured against early death

**EMOTIONAL BENEFITS**

- Letting your family know your wishes
- Peace of mind to you & your family
- Relieve the added stress & burden

8911 Woodbine Ave, Markham , ON, L3R 5G1 • www.chapelridgefh.com • Email: info@chapelridgefh.com

# சிட்னியில் கவிஞர் அம்பி 90 ஈழத்துப் படைப்பாளி

கவிஞர் அம்பி ஈழத்தின் மூத்த எழுத்தாள ஆளுமை கடந்த பெப்ரவரி 17 ஆம் திகதி அகவை 90 கண்டார்

சிட்னியில் வாழும் அவரின் இலக்கியப் பணியைப் போற்றிக் கொண்டாடும் உயரிய சிந்தனையில் அவுஸ்திரேலியா வாழ் தமிழ் சமூகம் விழாக் குழுவொன்றை உருவாக்கி மூன்று மாதத் திட்டமிடலோடு கடந்த ஏப்ரல் மாதம் 28 ஆம் திகதி விழா அரங்கை அமைத்தது. இது நாள் வரை கண்டிராத பெருங் கூட்டம் கவிஞர் அம்பி ஐயா மீதான நன்றியறிதலோடு அரங்கத்தில் திரண்டது

கவிஞர் அம்பி 90 விழா நிகழ்வில் நத்துவிளக்கேற்றலில் இருந்து விழா நிறைவு வரை ஈழத்தின் கலை, இலக்கியத் துறையில் பங்களித்தோர். சிட்னி வாழ் தமிழ்ப் பாடசாலை மாணவர்கள் என்று பொருத்தப்பாட்டோடு நிகழ்வை அணி செய்தனர்.

கவிஞர் அம்பியின் விரிவான இலக்கியப் பணியை ஆய்வுப் பார்வையிலும், வரலாற்றுப் பதுவாகவும் கொண்டு விழா மலரும் வெளியிட்டு வைக்கப்பட்டது. இந்த விழா மலரில் அம்பி அவர்களை வாழ்த்திட் [illegible] அம்பியின் [illegible] சிறப்புக்க [illegible] அமைந்தது [illegible]

[illegible] கணேசனின் வரவேற்புரையைத் [illegible] வசிச் செயற்பாட்டாளரும், [illegible] கவிஞருமான திரு திருநந்தகுமார் [illegible] தலைவராக இருந்து விழாவைக் [illegible] நடத்தினார். அவுஸ்திரேலியாவில் தமிழ் மாணவருக்கான பாட நூல் ஆக்கத்துக்காக அப்போது பப்புவா நியூகினியில் இருந்த அம்பியிடம் தான் வேண்டுகோள் விடுத்து அதன் பிரகாரம் தமிழ்ப் பாட நூல் பணியில் அம்பியின் பங்களிப்பு பெற்றது குறித்த வரலாற்றுச் செய்தியை பேராசிரியர் கந்தராசா அவர்கள் பகிர்ந்த நயப்புரையில் கல்விச் சமூகத்தில் அம்பியின் பங்கின் ஆழம் புரிந்தது

கனடா உதயன் ஆசிரியர் திரு லோகேந்திரலிங்கம் அவர்களின் சிறப்புரை தொடர்ந்து இடம்பெற்றது. கவிஞர் செ.பாஸ்கரன் கவிஞர் அம்பிக்குத் தான் யாத்த கவிதையால் வாழ்த்தினார். ஈழத்தின் மூத்த எழுத்தாள ஆளுமைகள் எழுத்தாளர் லெ.முருகபூபதியின் உரையில் அம்பியின் இலக்கியப் பணியைத் தாண்டி அவரின் குணாதிசியம் குறித்த கலகலப்பான உரை அமைய, அம்பியின் கவிதை நயத்தை எழுத்தாளர் மாத்தளை சோமு உதாரணங்கள் காட்டிச் சிறப்பித்தார்.

இந்த விழாவின் சிறப்பு விருந்தினராக நியூ சவுத்வேல்ஸ் மாநிலத்தின் பாராளுமன்ற உறுப்பினர் Jodi McKay வருகை தந்து சிறப்புரையாற்றியதோடு பாராளுமன்றத்தின் சிறப்புப் பட்டயம் ஒன்றைக் கௌரவப் பரிசாகக் கவிஞர் அம்பிக்கு வழங்கிக் கௌரவித்தார்

பாப்பா பாடல்கள் மூலமாகவும், பாட நூல்கள் வழியாகவும் அடுத்த தலைமுறை இளையோரோடு தொடர்ந்தும் காலா காலமாகத் தொடர்பில் இருக்கும் அம்பி ஐயாவுக்கு இளையோர் இணைந்து இந்த விழாவில் பங்கேற்றுச் சிறப்பித்தது மிக முக்கியமாகக் குறிப்பிட வேண்டியது. சிட்னியின் இரு பெரும் தமிழ்ப் பள்ளிகளான வென்ற்வேர்த்வில் தமிழ்ப் பாடசாலை மற்றும் ஹோம்புஷ் தமிழ்ப்பாடசாலை மாணவர்கள் தனித்தனி கவிதா நிகழ்வும், பேச்சரங்கமுமாகக் கவிஞர் அம்பியின் படைப்புகளைச் சிலாகித்துப் பகிர்ந்தனர்.

கம்பன் கழகம் அவுஸ்திரேலியாவின் இளையர் செல்வி பூர்வஜா நிர்மலேஸ்வரக் குருக்கள் மற்றும் செல்வன் புவன் செந்தில் ஆகியோர் சிறப்புரையாற்ற வைத்திய கலாநிதி யதுகிரி லோகதாசன் தன் இனிய குரலில் கவிஞர் அம்பி கவிதைகளைப் பாட்டிசைத்துப் பாடினார்.

ஈழத்தில் மருத்துவத் துறையில் பெரும்பணியாற்றிய மருத்துவ முன்னோடி சாமுவேல் கிறீனின் பெருமையைத் தமிழ் கூறும் நல்லுலகிற்கு அறிமுகப்படுத்தியவர். குழந்தைப் பாடல்களை ஈழத் தாயகத்திலும், புலம் பெயர் மண்ணிலும் பரப்பச் செய்தவர். வானொலி ஊடகத் துறையிலும் கால் பாதித்தவர், சிறந்த சிந்தனையாளர் தன் முதுமையிலும் கலகலப்பாகவும் மற்றோர் முகம் கோணாமலும் பேசும் மாண்பு கொண்ட கவிஞர் அம்பியின் ஏற்புரையோடு அவையோர் கௌரவம் அம்பி தம்பதிகளுக்குக் கொடுக்கப்பட விழா இனிதே நிறைந்தது.

- கானா பிரபா









ஈழ விடுதலைப் போராட்டத்தின் முன்னோடியான தியாகி பொன்.சிவகுமாரன்




யாழ்ப்பாணம், உரும்பிராயில் காவற்துறையினரின் சுற்றி வளைப்பின் போது நஞ்சருந்தி தனதுயிரை ஈகம் செய்தார். ஈழவிடுதலைப்போராட்ட வரலாற்றில் முதன் முதலில் நஞ்சுண்டு உயிர் துறந்தவர்.

மாணவனாகவிருந்த தியாகி பொன். சிவகுமாரன், தமிழ் மக்களின் உரிமைகள் மீட்கப்படுவதற்கும் சுதந்திர இருப்பை உறுதிசெய்வதற்கும் ஆயுதப் போராட்டமே சரியான வழி என்பதை உணர்ந்து சிங்கள இனவாதத்திற்கெதிராக ஆயுதமேந்திய போராட்டத்தை முன்னெடுத்தார்.

தமிழீழ மக்கள் மனங்களில் விடுதலைத் தீப்பொறியை இட்டுச்சென்ற அம்மாவீரனின் நினைவு நாள் ஜூன்5.

1971ல் தமிழ் மாணவர் பேரவையில் இணைந்த சிவகுமாரன் சில தோழர்களை ஒருங்கிணைத்து சிங்கள அரசுக்கும் தமிழ்த் தேச விரோத சக்திகளுக்கும் எதிரான போராட்டத்தில் ஈடுபட்டார்.

கல்வித் தரப்படுத்தலை அமுல்படுத்திய சிறிமா அரசின் துணை அமைச்சராகவிருந்த சோமவீர சந்திரசிறி பயணம் செய்த வாகனத்திற்கு நேரக்கணிய வெடி வைத்தலோடு ஆரம்பமானது சிவகுமாரனது ஆயுதப்போராட்ட வரலாறு (செப் 1970). இச்சம்பவத்திலிருந்து சிங்கள அமைச்சர் உயிர்தப்பிய போதும், அச்சம்பவம் தொடர்பான குற்றச்சாட்டில் கைதான சிவகுமாரன் சிறையில் மோசமான சித்திரை வதைகளுக்குட்படுத்தப்பட்டார்.

தொடர்ந்து தமிழ் மக்களின் உரிமைப்போராட்டத்தைகாட்டிக்கொடுக்கும் துரோகத்தனத்தை புரிந்து வந்த யாழ்-நகரமேயர் அல்பிரட் துரையப்பா மீதும் தாக்குதல் முயற்சிகளை மேற்கொண்டார் (பெப் 1971). அம்முயற்சிகளும் வெற்றியளிக்கவில்லை. துரையப்பா மீதான தாக்குதல் காரணமாக கொலை முயற்சிக் குற்றம் சுமத்தப்பட்டு, 3 ஆண்டுகள் கொடுமையான துன்றுத்தல்களுடன்கூடிய சிறைவாழ்க்கையின் பின்னர், தனது 23வது வயதில் விடுதலையானார். ஆனாலும் அவர் மனம் தளரவில்லை. மிகவும் உறுதியோடு போராட்டச் செயற்பாடுகளை முன்னெடுத்தார்.

தமிழ் மக்களின் அபிலாசைகளையும் உரிமைகளையும் நிலைநிறுத்தும் பொருட்டு அமைதி வழியில் மேற்கொள்ளப்பட்டு வந்த போராட்டங்களையும் பெரிதும் மதித்து ஏற்றுக்கொண்டார்.

தமிழ்ச் சமூகத்திற்குள் புதைந்திருந்த சமூக அடுக்குகளைப் பொசுக்கும் முயற்சிகளிலும் அவர் பின்நிற்கவில்லை. சாதியம், பெண் அடக்குமுறைப்போக்கு, மணக்கொடை போன்ற சமத்துவ வாழ்வுக்குப் புறம்பான போக்குகளையும் துணிந்து நின்று எதிர்த்தார்

சிறிமா அரசானது, 1974 ஜனவரியில் யாழ்ப்பாணத்தில் ஒழுங்கு செய்யப்பட்ட 4வது உலகத்தமிழ் ஆராய்ச்சி மாநாட்டைக் குழப்பும் நோக்கில் பல இடையூறுகளை விளைவித்தது. ஆனாலும் மாநாட்டு ஒழுங்கமைப்பாளர்களின் உறுதியான செயற்பாட்டால் மாநாடு பெரும் மக்கள் எழுச்சியுடன் நடந்தேறியது. இவ் வெற்றியின் பின்னணியில் சிவகுமாரன் மிகவும் உத்வேகத்துடன் செயற்பட்டார் என்பதும் வரலாற்றில் பதிவான ஒன்று.

பின்னர் மாநாட்டுக்கு வருகை தந்திருந்த வெளிநாட்டுப் பிரமுகர்களுக்கு பிரியாவிடை வழங்கும் நிகழ்ச்சியில் பொதுமக்கள் மீது சிங்களக் காவல்துறையினர் துப்பாக்கிப் பிரயோகம் மேற்கொண்டதில் 9 பொதுமக்கள் கொல்லப்பட்டனர். சிறிலங்கா காவல்துறையின் இந்த மிலேச்சத்தனமான படுகொலையை நேரில் கண்ட சிவகுமாரன் கொதித்தெழுந்தார். அப்படுகொலைக்கு உடந்தையாகவிருந்த உதவிக் காவல் அதிகாரி சந்திரசேகராவைப் பழிவாங்குவதற்கு கடுமையான முயற்சிகளை மேற்கொண்டார்.

சிவகுமாரன் விடுதலை என்ற உன்னத இலட்சியத்திற்காக உண்மையான அர்ப்பணிப்புடனும் தொலைநோக்குடனும் செயற்பட்டவர். தமிழ் மக்களின் விடியலுக்காக போராடிய தியாகி பொன். சிவகுமாரன் அவர்கள் களச்செயற்பாட்டில் ஈடுபட்டிருந்த தருணத்தில் எதிரிகளால் சுற்றிவளைக்கப்பட்ட போது, எதிரிகளிடம் உயிருடன் பிடிபடக்கூடாது என்ற உயர்ந்த இலட்சியத்தைத் தாங்கி சயனைட் அருந்தி தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் முதல் தற்கொடையாளனாய் 1974ம் ஆண்டு யூன் 5ம் நாள் தியாகி பொன் சிவகுமாரன் வீரச்சாவைத் தழுவிக்கொண்டார்.

# பலதும் பத்தும்!

## விண்வெளியில் பயணிக்க ஓர் கார்!



விண்வெளிக்குச் நீங்கள் செல்வதகா இருந்தால், அங்கு நீங்கள் இலகுவாக பயணிப்பதற்கு என்று புதியவகை கார் ஒன்று ஜப்பானில் உருவாகி வருகின்றது.

ஜப்பான் விண்வெளி ஆய்வு மையமும் ஜப்பான் கார் தாயரிப்பு நிறுவனமான ரொயோட்ராவும் இணைந்து இதனை உருவாக்குகின்றது.

இதன் வடிவம் நிலவில் பயணிக்கும் வகையில் அமையும் இக்காரில் 2 பேர் பயணிக்க முடியுமஅதே வேளை அவசர காலங்களில் 4 பேர் வரை பயணிக்கும் வகையிலும் வடிவமைக்கப்படுகின்றது.

6 மீற்றம் நீளம், 5.2 மீற்றர் அகலம் மற்றும் 3.8 மீற்றர் உயரமும் கொண்டதாக அமையவுள்ளது.

முழுக்க முழுக்க சூரிய ஒளியால் இயங்கும் வகையில் இந்த வாகனம் இருப்பதாகவும், இந்த வாகனம் தொடர்ந்து 10 ஆயிரம் கிலோமீட்டர் தூரம் வரை பயணிக்கக்கூடியதாக உருவாகும் இக்காரனது 2029ம் ஆண்டே சந்தைக்கு வரவுள்ளது.

## 112 ஆண்டுகளுக்கு பின்னர் வந்த தபால் அட்டை!



லேற்றானாலும் லேற்றஸ்ரா வந்தன் என்பது போல், 112 ஆண்டுகளுக்கு பின்னர் நபரொருவரால் எழுதி அனுப்பப்பட்ட தபால் அட்டை உரிய முகவரிக்கு வந்து சேர்ந்துள்ளது.

பிரித்தானியாவின் டெவொன் பிராந்தியத்தில் பிளைமவுத் எனும் இடத்தில் வசிக்கும் மிசேலா வெப்பர் என்ற 24 வயது பெண்ணுக்கு இது வந்து சேர்ந்துள்ளது.

கடிதத்தினை அப்பெண் பார்வையிட்டபோது தனது வீட்டு முகவரியிடப்பட்டு அனுப்பப்பட்டிருந்த குறிப்பிட்ட தபால் அட்டையைக்கண்டு அவர் திகைப்படைந்துள்ளார்.

அப்பெண்ணின் வீட்டில் முன்னொரு சமயம் வாழ்ந்தவருக்கு 1907ம் ஆண்டில் நத்தார் தினத்-துக்கு முதல் நாள் குறித்த தாபல் அட்டை அனுப்பப்பட்டுள்ளது.

இத்தனை ஆண்டுகள் கழித்து தற்போது இத்தாபல் அட்டை வந்து சேர்த்திருப்பது ஒரு புறமிருக்க அனுப்பியவரும், சேரவேண்டியவரும் தற்போது உயிரோடு இல்லை என்பதுதான் சோகம்.

டென்மார்க்கில் வருடாவருடம் நடைபெறும் மிஸ் யூனிவேர்ஸ் எனப்படும் அழகுராணி போட்டியில் முதற் தடவையாக ஈழத் தமிழ் பெண்மணியான நர்வினி டேரி ரவிசங்கர் இறுதி சுற்றுக்கு தேர்வு செய்யப்பட்டுள்ளார்.

கடந்த 07.06.19 அன்று டென்மார்க் தலைநகர் கோப்பன்கேகனில் இறுதிப்போட்டி நடைபெற்றது. இது மூன்று முக்கிய பிரிவுகளாக நடைபெற்றது, முடிவில் டென்மார்க்கின் மிஸ் யூனிவேர்ஸ் தெரிவு செய்யப்பட்டார்.

கடந்த பல மாதங்களாக நடைபெற்று வரும் இந்தப்போட்டியின் பல படிகளையும் தாண்டி ஓர் ஈழத்தமிழ் பெண் துணிகரமாக இறுதிச் சுற்றுக்கு முன்னேறியிருப்பது கவனிக்கத்தக்கது.

மிஸ் யூனிவேர்ஸ் என்ற பெயருடன் நடைபெறும் இந்தப் போட்டி தனியே டென்மார்க்கில் மட்டும் நடைபெறும் போட்டியல்ல,




உலகாளாவிய மிஸ் யூனிவேர்ஸ் எனப்படும் போட்டியுடன் இணைந்த சர்வதேச போட்டியாகும்.

இதில் இறுதிச் சுற்றில் வெற்றி பெற்றவர் அடுத்த கட்டமாக அமெரிக்கா செல்ல வேண்டும். அங்கு உலகத்தின் மற்றைய நாடுகளின் வெற்றியாளர்களைச் சந்திக்க வேண்டும். அங்கு இவர்கள் இணைந்து தங்களுக்கு கிடைத்த அங்கீகாரத்தால் இந்த உலகத்தின் மேம்பாட்டுக்கு செய்ய வேண்டிய உயர் கருமங்கள் யாதென சிந்திக்க வேண்டும். இணைந்து செயற்பட வேண்டும்

1924 முதல் டென்மார்க்கில் அழகுராணி போட்டி நடைபெற்று வருகிறது. 1924ம் ஆண்டு டென்மார்க்கில் நடைபெற்ற முதலாவது அழகுராணி போட்டியில் வெற்றி பெற்றவர் எடித் யொகான்சன் என்ற டேனிஷ் அழகியாகும். அன்று தொடங்கி இன்று வரை டென்மார்க்கில் நடைபெறும் போட்டிகளில். அவ்வப்போது வெளிநாட்டவர்கள் பங்கேற்றாலும் இப்போதுதான் முதற் தடவையாக தமிழ் பெண் ஒருவர் பங்கேற்று இறுதி சுற்றுக்கு முன்னேறியிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது

டென்மார்க்கின் முதலாவது மிஸ் யூனிவேர்ஸ் தமிழ் போட்டியாளரான நர்வினி டேரி ரவிசங்கர் டென்மார்க் ஒல்போ பல்கலைக்கழகத்தில் சமூக நலத்துறையில் முதுமாணி கற்கை கற்கும் மாணவியாகும் இவருடைய பெற்றோர் இலங்கையை சேர்ந்தவர்கள் போர் காரணமாக தமிழகத்திற்கு புலம் பெயர்ந்து, அங்கிருந்து ஒன்பது வயதில் டென்மார்க் வந்தவராகும் திரைப்படம் நடித்தல், காணொளிகளை தயாரித்தல், நடித்தல், பாடல்கள் எழுதி இயக்குதல், சமுதாயப் பணிகளை முன்னெடுத்தல் என்று பலதரப்பட்ட துறைகளில் முனைப்போடு செயற்பட்டு வரும் ஒருவராகும்

ஊயிர்வரை இனித்தாய் என்பது நர்வினி டேரி; நடித்த முதலாவது திரைப்படமாகும். இப்படத்தில் முக்கிய பாத்திரம் ஏற்று நடித்த நர்வினி டேரி ரவிசங்கர் நோர்வே, சுவிற்சலாந்து திரைப்பட விழாக்களில் சிறந்த நடிகைக்கான விருதையும் பெற்றுள்ளார். அத்திரைப்படத்தில் பாடல், ஒப்பனை என்று பல பகுதிகளில் பணியாற்றினார், மேலும் ஒரு திரைப்படத்தில் நடித்துள்ளார். இலங்கை, இந்திய கலைஞர்கள் இணைந்து உருவாக்கிய அப்படத்திலும் நர்வினி முக்கிய பாத்திரத்தில் நடித்துள்ளார். விரைவில் தமிழகத்திலும் இலங்கையிலும் திரைக்கு வரவுள்ளது.

டென்மார்க்கில் சமுதாய நலத்துறை சார் கல்வியை கற்றதோடு, இயல்பாகவே சமூக அக்கறை மிக்க பணிகளில் ஈடுபடுவதும் இவருடைய வாழ்வியல் பணியாகும். அந்தவகையில் குழந்தைகள் பாலியல் துஷ்பிரயோகம் தொடர்பாக இவருடைய இயக்கத்திலும் எழுத்திலும் வெளியான காணொளிப் பாடல் ஒன்று சென்ற ஆண்டு நோர்வே திரைப்பட விழாவில் சிறந்த பாடலாக தேர்வு செய்யப்பட்டது.

மிஸ் யூனிவேர்ஸ் என்னும் போட்டியானது உடல் அழகை மட்டும் அடிப்படையாகக் கொண்டதல்ல, பெண்களிடையே சுய நம்பிக்கையை வளர்ப்பதும், அவர்களை இந்த உலக மேம்பாட்டுக்காக பாடுபடும் ஆளுமையாளர்களாக உருவாக்குதல் போன்ற பல உன்னத பணிகளையும் உள்ளடக்கியதாகும். உணவுக்கட்டுப்பாட்டில் இருந்து உள்ளக்கட்டுப்பாடு வரை இதில் பல பயிற்சிகள் உண்டு. அத்தனை அம்சங்களிலும் தனித்துவமாக சிந்தித்து வெற்றி பெறும் ஒருவரே நிறைவாக வெற்றி முடியை சூட்டிக்கொள்ள முடியும்.

இந்த வெற்றி முடியை சூடும் ஒருவர் மனிதாபிமானத்தின் குரலாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. மேலும் அரசாங்கம், வணிக நிறுவனங்கள், நிதித்துறை, ஒளிபரப்பு, திரைப்படம் போன்ற பல்வேறு துறைகளிலும் பரிமளிக்க இப்போட்டியானது உந்து சக்தியாகவும் அமைகிறது. மேலும் இது டென்மார்க்கை மட்டும் எல்லையாகக் கொண்டதல்ல உலக நாடுகளுடன் இணைந்த பணியாகும்.

மிஸ் யூனிவேர்ஸ் எனப்படும் உலக அழகியாக வெற்றி பெற்றால் அந்தக் கிரீடத்தை வைத்து, சொந்த நாட்டிலும், அகில உலகத்திலும் மனித குலத்தால் தீர்க்க சவாலாக இருக்கும் பிரச்சனைகளைத் தீர்க்க அதை எவ்வாறு பயன்படுத்துவீர்கள் என்ற கேள்விக்கான விடையின் தனித்துவமும் இந்தப் போட்டியில் முக்கியம் பெறுகிறது. மேலும் ஒருவர் மிஸ் யூனிவேர்ஸ் என்ற போட்டியில் வெற்றி பெறுவதனால் சமுதாயம் அடையப்போகும் பயன் என்ன..? இதற்கு சரியான பதில் கொடுக்கும்விதமாக ஒன்றல்ல இரண்டல்ல அனைத்து ஆற்றல்களையும் வெளிப்படுத்த வேண்டும்.

இப்போட்டியில் ஒருவர் பங்குபற்றும் போதே அவரிடம் ஒரு தன்னம்பிக்கை மலர்ந்துவிடுகிறது. உலகம் முழுவதும் வருடம்தோறும் 10.000 பெண்கள் இப்போட்டிக்கு வருகிறார்கள். அவர்களுக்கு அது ஒரு சமுதாய அந்தஸ்த்தை வழங்குகிறது.

டென்மார்க்கில் நடைபெறும் மிஸ் யூனிவேர்ஸ்என்ற அழகுராணிபோட்டியானது தமிழர்களையும் இணைத்து முன்னேறும் டென்மார்க் நாட்டிற்கும் ஒரு தனித்துவத்தை கொடுக்கிறது. டென்மார்க் நாட்டின் அழகுராணியாக ரஷ்யா நாட்டைச்சேர்ந்த டென்மார்க்கில் வாழ்ந்துவரும் கட்ஜா தெரிவாகியுள்ளார். நர்வினி டெரி முதல் 15 பேருக்குள் இடம்பிடித்துள்ளார்.




மனித வாழ்க்கையின் அனைத்துப்பகுதியிலும்சகிப்புத்தன்மை தேவைப்படும் ஒன்றாகும்.

ஒரு சமூகத்தில் வாழ்வியலில் ஆளுமை செலுத்தும் பண்பாக எடுத்துக்கொள்ளப்படுவது சகிப்புத் தன்மையாகும்.

மனித வாழ்வு மகத்தானது மாண்பின் எல்லைவரை செல்லக்கூடியவன் மனிதன். பண்புள்ள மனிதனால் சாதனைகள் படைக்கப்படுகின்றன. பெருமையும் சிறுமையும் பேரானந்தமும் உடைய மனிதன் பேணப்பட வேண்டிய பண்பு சகிப்புத்தன்மையாகும்.

மானிடவாழ்வில் மனிதன் நிலைத்து வாழ வேண்டிய குணநலன்களை சாதகமாக்கி வாழ வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. பொறுமை சகிப்புத்தன்மை புரிந்துணர்வு என அடுக்கிக் கொண்டே செல்லலாம்.

இங்கு சகிப்புதன்மை இருப்பதால்தான் மனிதனை மனிதனாக மதிக்கமுடிகிறது.

பொறுமை எனும் நகையணிந்து பெருமை கொள்ள வேண்டும் என்பது ஆற்றோர் வாக்கு.

சகிப்புத்தன்மை உள்ளவன் பலதை சாதிக்க கூடியவனாக உள்ளான்.சமுதாயத்துடன் ஒன்று சேர்ந்து நல்லவற்றை செய்ய முற்படுவான்.

சேர்ந்து வாழ்வதனால் சோர்ந்து போகாமல் மனிதனை மனிதன் மதிக்க கற்றுக்கொள்கிறான்.

இன்று பலரிடம் சகிப்புத்தன்மை குறைவதனால் போட்டிகள் சண்டைகள் விட்டுக்கொடுப்புகள் இன்மையால் வன்முறைகள் அதிகரித்து வருகின்றன.

அறிவியல் உலகு இது. ஆற்றலும் வளர்ச்சியும் விஞ்ஞானத்தை விரல் நுனியில்நகர்த்தும் பலமாக உள்ளது. வேகமான செயற்பாடுகள்அதிகரித்து செல்வதனால் விவேகம் குறைவடைந்து செல்கிறதோ என எண்ணத்தோன்றுகிறது.

நல்லவாழ்க்கை வாழும் மனிதன் சகிப்புத்தன்மையால் உயர்ந்தவனாக உருவாகிறான்.

பண்பு நலன் தானாக வளர்கிறது. மாறாக இந்த கணணியுகம் அனைத்தையும்இல்லாமல் வேகமான வளர்ச்சியில் செல்கிறது.

இன்று கைக்குள் கணணி உலகு இருப்பதால் அடுத்த சந்ததி இவற்றின் தாக்கத்தால் பொறுமை இழந்து வாழ்வதாக எண்ணப்படுகிறது.

இன்றைய சிறார்கள் கணணி விளையாட்டுகள் போன்றவற்றில் அதிகளவு நேரத்தை செலவழிப்பதால் விறு விறு துரு துரு என அவர்கள் மனமும் வளர்கிறதே!

வேகமான பார்வைகளால் கோபம் பொறுமை அற்ற நிலைகள் உருவாக்கப்படுகிறது.

வாழ்க்கை சோதனைகளால் ஆனது. பசி பட்டினி தாக்குகையில் அவற்றை சகித்து வாழ வேண்டும். இதை எமது அடுத்த சந்ததிக்கு வளர்த்தல் வேண்டும் நோய்கள் வருகையில் சகிப்புதன்மையுடன் வாழ வேண்டும்.

சகிப்புத்தன்மை இல்லாவிட்டால் பலவற்றை சாதிக்க முடியாது. மாறாக கோபம் மன அழுத்தம் போன்றவை அதிகரிப்பதனால் நிதானம் இழக்கப்படுகிறது. நிம்மதி குலைகிறது.

மகிழ்வும் தானாகப் பறக்கிறது. வேதனையும் துன்பமும் குடிகொள்ள மகிழ்ச்சியற்ற வாழ்வு துளிர்ப்பதால் தாழ்வுச்சிக்கல் தோன்றுகிறது.

இதனால் வாழ்வை வெறுப்பர். வன்முறை வளரும்.மாறாக தன்னை அழித்தும் கொள்வர்.

தீய செயல்களில் நாட மனம் உந்தும். எனவே சகிப்புத்தன்மையை வளர்ப்போம்.

ஒழுக்கம் விழுப்பம் தரலால்
ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்.

அந்த வகையில் நல்லொழுக்கம் பேணப்பட பொறுமையுடன் வளர்த்து வாழ்தல் சிறப்பே!

இறை நம்பிக்கையை இதயத்தில் வைத்து வாழ்தல் எல்லாவற்றையும் சகிப்புடன் வளர்த்திட உதவிடும். எனவே சகிப்பை வளர்ப்போம் சந்தோச வாழ்வை மனதிலே ஏற்றுவோம்.




## மருத்துவனையில் 100 பேரைக் கொன்ற செவிலியர்!



ஜேர்மனி நாட்டில் இரண்டு மருத்துவமனைகளில் பணியாற்றிய வேளைகளில் அங்கு சிகிச்சை பெறவந்த நூறு நோயாளர்களை கொன்றதாகச் சுமத்தப்பட்ட வழங்கின் தீர்ப்பை ஜேர்மனிய செவிலியர் ஒருவர் எதிர்கொண்டுள்ளார்.

1999, 2005ம் ஆண்டுக்கு இடைப்பட்ட காலங்களில் ஜேர்மனியின் ஒல்டன்பர்க், டெல்மன்ஹாரில் ஆகிய இடங்களில் இருவேறு மருத்துவமனைகளில் செவிலியராகப் பணியாற்றிய காலத்தில் நோயாளிகளைக் கொன்றதான ஆதாரங்கள் விசாரணயில் நிரூபணமாகியுள்ளது.

குற்றவாளிக்கு எதிராக வாதாடிய வழக்கறிஞர்கள் அவருக்கு ஆயுள் தண்டனை வழங்கவேண்டுமென்று கோரியிருந்தனர். இதனை படித்துக் கொண்டிருக்கும் நேரம் இவருக்கு தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கலாம்.

## இந்தச் செய்தி உண்மையா?



வட கொரியா தொடர்பில் மேற்குலக ஊடகங்களில் கட்டமைக்கப்படுகின்ற போலிச் செய்திகளுக்கு மத்தியில், சமீபத்தில் வட கொரிய அதிபர் தொடர்பில் வெளிவந்த செய்தியொன்று உண்மையா பொய்யா என்ற கேள்வி எழுந்துள்ளது.

அமெரிக்க அதிபர் ட்றம்புடனான தனது இரண்டாவது சந்திப்பினை சரியாக செயற்படுத்தவில்லை என்ற காரணத்துக்காக அவர்களுக்கு மரண தண்டனையை வட கொரியா அதிபர் விதித்திருந்தார் என செய்திகள் வெளிவந்திருந்தன.

பேச்சுவார்த்தைகளின் போது அமெரிக்க அதிபர் பாதியிலேயே வெளியேறிய விடயம், வட கொரிய அதிபருக்குக் கடும் கோபத்தை ஏற்படுத்தியாத தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்நிலையில் குறித்த அதிகாரிகள் மீது தேசத் துரோகம் செய்ததாக குற்றம் சுமத்தப்பட்டு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டுள்ளதாக வெளிவந்த செய்தி உண்மையா பொய்யா என்ற சந்தேகம் அவிழ்க்கப்படாத செய்திமுடிச்சாகவுள்ளது.

## யேர்மனியில் தமிழ்மொழிப் பொதுத்தேர்வு

யேர்மனியில் தமிழ்க் கல்விக் கழகத்தின் நிர்வாகக் கட்டமைப்பின்கீழ் இயங்கும் 120 க்கு மேற்படட் தமிழாலங்களில் பயிலும் பல்லாயிரம்மாணவர்களில்தேர்வுநிலைக்குத் தகைமையுள்ள ஆண்டு 1 தொடக்கம் ஆண்டு 12 வரையிலான 4800 மாணவர்களும் அத் தேர்வில் இணைந்துள்ளனர். தமிழ்க் கல்விக் கழகத்தின் தேர்வுப் பிரிவினால் ஒழுங்கு செய்யப்பட்ட 65 விசேடமான தேர்வு நிலையங்களில் முதற்கட்டமான 70 புள்ளிகளுக்கான அறிமுறைத் தேர்வை மாணவர்கள் ஆர்வத்துடன் எழுதியுள்ளனர்.











## அபுதாபியில் 18 கோடியை லொத்தரியில் வென்ற இந்தியர்!



மத்திய அரபு நாடான அபுதாபி லொத்தரியில் இந்தியர் ஒருவர், இந்திய ரூபாய் மதிப்பில் 18 கோடி ரூபாய் பரிசுத் தொகையை வென்றுள்ளார்.

மாதந்தோறும் இடம்பெறும் குலுக்கல் லொத்தரியில் இதுவரை 10 இந்தியர்கள் கோடிகளை வென்றுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

## மீண்டும் அதிபர் போட்டியில் ட்றம்ப்!



அமெரிக்காவில் அடுத்த ஆண்டு நடைபெறவுள்ள அதிபர் தேர்தலில் தாம் மீண்டும் போட்டியிடவுள்ளதாக அமெரிக்க அதிபர் ட்றம்ப் தெரிவித்துள்ளார்.

ஜனநாயக கட்சி சார்பில் வேட்பாளர் போட்டியில் ஜோ பிடென் உள்ளிட்ட பல தலைவர்கள் உள்ள நிலையில், இதனைத் தாம் அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்போவதாக அவர் தெரிவித்துள்ளார்.

## மாசுக்காற்றுக்கு எதிராக பிரான்சில் வழக்கு!



தாங்கள் வசிக்கும் நகரத்தின் காற்று மாசுபாட்டால் உடல்நிலை பாதிக்கப்பட்டுள்ளதாகவும், அதற்கான இழப்பீட்டுத் தொகையாக 160000 யுரோக்களை தரவேண்டுமெனக் கோரி வழக்கொன்று பிரான்ஸ் நீதிமன்றத்தில் தொடுக்கப்பட்டுள்ளது.

மாசுபாட்டைத் தடுக்க அரசு எந்தவித பாதுகாப்பு நடவடிக்கையும் எடுக்கவில்லை, முக்கியமாக கடந்த டிசம்பர் 2016 ல் பாரிஸ் மிகவும் அதிகமான மாசுபாட்டை சந்தித்த போதும் எவ்வித நடவடிக்கையும் மேற்கொள்ளவில்லை என்றும் அவர்கள் தமது வழக்கில் தெரிவித்துள்ளனர்.

## கருக்கலைப்பு தொடர்பான வத்திகானின் நிலைப்பாடு என்ன?



கருக்கலைப்பு விவகாரம் ஒரு மதரீதியான பிரச்சினையல்ல, மாறாக மனிதாபிமான பிரச்சினை என்று புனித போப் ஆண்டவர் பிரான்சிஸ் தெரிவித்துள்ளார்.

கருக்கலைப்பை ஏற்க முடியாது என்றும் கருவில் உள்ள குழந்தையை அழிப்பது கூலிப்படையை ஏவி கொலை செய்வதற்குச் சமம் என்றும் அவர் தெரிவித்துள்ளார்

பலர் கரு சரியானபடி வளரவில்லை என்பதால் கருக்கலைப்பு செய்வதை சுட்டிக் காட்டிய போப், மிகவும் பலவீனமான முறையில் பிறந்தாலும் பரவாயில்லை, குழந்தைகளை வரவேற்குமாறு குடும்பத்தினருக்கு அறிவுரை வழங்கினார்.

# மரண அறிவித்தல்



பிறப்பு 11-Dec-1928

இறப்பு 19-Jun-2019

**கலாநிதி சண்முகசுந்தரம் வேலுப்பிள்ளை (பரியாரியார்)**

ஆயுர்வேத வைத்தியர்

வயது 90

கரவெட்டி (பிறந்த இடம்),

கல்வியங்காடு Toronto-Canada



பிறப்பு 25-Jul-1943

இறப்பு 13-Jun-2019

**Mr. NADARAJAH YOHENDRA**

Age 75

Urumpiray (Born),

Etobicoke - Canada



பிறப்பு 23-Oct-1935

இறப்பு 13-Jun-2019

**Mrs. THANGAMMA THARMALINGAM**

(சீட்டுக்கார தங்கம்மா)

Age 83

Karainagar (Born),

Toronto - Canada



பிறப்பு 31-May-1932

இறப்பு 14-Jun-2019

**Mrs. AMBIKAI ULAGANATHAN**

Age 87

Kantharodai (Born),

Toronto - Canada



பிறப்பு 01-Jul-1946

இறப்பு 08-Jun-2019

**Mr. BALASINGAM CHELLIAH**

Age 72

Ariyalai (Born),

Scarborough - Canada



பிறப்பு 11-Aug-1934

இறப்பு 04-Jun-2019

**Mrs. SARASWATHY RUTH JESUDHASAN**

Age 84

Colombo (Born),

Toronto - Canada



பிறப்பு 20-Dec-1945

இறப்பு 06-Jun-2019

**Mr.BALASUBRAMANIAM KANAPATHIPILLAI**

(பாலா)

Age 73

Sarasalai (Born),

Scarborough - Canada



பிறப்பு 03-Feb-1971

இறப்பு 04-Jun-2019

**Mrs. RATNAMALA PAVALAKANTHAN**

Age 48

Oorikadu (Born),

Scarborough - Canada



பிறப்பு 14-Jun-1991

இறப்பு 10-Jun-2019

**LATE SUBRAMANIAM PARTHEEPAN**

**D.J BROWN SOUL**

Age 27

Kaithady (Born),

Scarborough - Canada



# இது தானா இந்து மதம் அண்ணாவின் பேனாவிலிருந்து!

"நாம் யாருக்கும் மேல் அல்ல, நமக்கு யாரும் மேலோர் அல்ல! நாம் ஆள ஆட்கள் வேண்டாம்! நம்மை ஆளவும் அய்யர்மார் வேண்டாம்! நம்மிடையே தரகர் கூடாது, தர்ப்பை ஆகாது. சேரியும் கூடாது. அக்கிரகாரமும் ஆகாது. யோக யாகப் புரட்டுகள், புரோகித பித்தலாட்டம், மனுக் கொடுமை வேண்டாம். மனிதர் யாவரும் சரிநிகர் சமானமாக வாழ்வோம் என்று கூறுபவர் எப்படித் தம்மை "இந்து" என்று கூறிக்கொள்ள முடியும்? மூடமதிக்காரர், கொடுமைக்காரர், அடிமை, சூத்திரன் என்று கூறிக்கொள்ள எப்படித்தான் மனம் இடந்தரும்? எப்படித் தான் துணியும்?

"இந்து மதம்" என்பதிலே உள்ள கடவுள் முறை, சமுதாய முறை, மதக்கதை முறை, மக்கள் வாழ்க்கை முறை ஆகியவற்றை அலசிப் பார்த்த பிறகு யாருக்குத் தான் தன்னை ஓர் "இந்து" என்று கூறிக்கொள்ள மனம் இடந்தரும்? பாம்பை எடுத்துப் படுக்கையில் விட்டுக் கொள்வாரா? விஷத்தை எடுத்து உணவில் சேர்ப்பாரா? வீதிக் குப்பையை வீட்டுக்குள் கொண்டு போய்ச் சேர்ப்பாரா? மதி துலங்கும் விஷயங்களை விட்டு, மதி கெடுக்கும் கற்பனைகளைக் கட்டி அழுவாரா? மீள மார்க்கம் தேடுவதை விட்டு, மாள வழி தேடிக் கொள்வாரா? விடுதலைக்கு வழி பிறந்த பின்னர், அடிமை முறிச்சீட்டில் கையொப்பமிடுவாரா? கண் தெரியும் போது குழியில் வீழ்வாரா? தாம் திராவிடர் எனத் தெரிந்த பிறகு, திராவிடர் தன்னிகரற்று வாழ்ந்த இனம் என்பது தெரிந்த பிறகு, தம்மை இழிவு செய்து, கொடுமைக்கு ஆளாக்கும் "இந்து மார்க்கத்தில்" போய்ச் சேர இசைவாரா? வீரத் திராவிடர் என்று ஓர் உணர்ச்சி வீறிட்டு எழப் பெற்றோர், இனி ஈனமாய் நடத்தும் இந்து மார்க்கத்தை ஏறெடுத்தும் பாரார்! அதன் இடுக்கில் போய்ச் சேரார்!! இழிவைத், தேடார்!!!"

- அண்ணா எழுதிய 'ஆரிய மாயை' பக்கம் 32, 33

- நன்றி: விடுதலை இதழ்.

# யேர்மனியில் நடைபெற்ற தமிழின அழிப்பு நாள் நிகழ்வு–2019





யேர்மனி டுசில்டோர்வ் நகரில் மே 18 அன்று தமிழின அழிப்புநாள் 2019 மிகச்சிறப்பாக நடைபெற்றது. டுசில்டோர்வ் நகரத்தின் புகையிரதநிலயத்திற்கு முன்புறமாக உள்ள வீதியில் கறுப்பு உடைகள் அணிந்து அணிதிரண்ட மக்கள். கறுப்புநிற பலூன்களில் இன அழிப்பு சம்பந்தமமான கோசங்களை எழுதி ஒவ்வொருவரும் தங்களின் கைகளில் ஏந்தியபடியும், பாதாதைகளையும் ஏந்தியபடியும் ஊர்வலமாக இம் மாநிலத்தின் பாராளுமன்றம் நோக்கிப் புறப்பட்டனர்.

ஆயிரக்கணக்கில் கோசங்களை எழுப்பியவாறு ஊர்வலமாகச் சென்ற மக்கள் இரண்டரை மணித்தியாலங்களின் பின்பு டுசில்டோர்வ் பாராளுமன்றத்தை வந்தடைந்தனர். அத்திடலில் தேசியக்கொடியும் ஈகைச்சுடரும் ஏற்றிவைக்கப்பட்டு நிகழ்வுகள் ஆரம்பமாகின மக்கள் தங்கள் கைகளில் ஏந்திவந்த கோசங்கள் எழுதப்பட்ட பலூன்கள் ஆயிரக்கணக்கில் வானத்தை நோக்கிப் பறக்கவிடப்பட்டன









# கைதான முஸ்லிம் வைத்தியரும் இலங்கை அரசும்

யாழ் வேலனை ஆதார வைத்தியசாலையில் பணியாற்றிய குடும்பநல மருத்துவத் தாதியான சரவணை தர்சிகா, அங்கு பணியாற்றிய சிங்கள வைத்தியர் ஒருவரால் பாலியல் துஸ்பிரயோகம் புரியப்பட்டுப் படுகொலை செய்யப்பட்டிருந்தார்.

2010 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இந்தப் படுகொலை நடந்தது. கைது செய்யப்பட்ட சிங்கள வைத்தியர் யாழ் சிறைச்சாலையில் தடுத்து வைக்கப்பட்டுப்பின்னர் அனுராதபுரம் சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டார்.

வழக்கும் யாழ் நீதிமன்றத்தில் இருந்து கொழும்புக்கு மாற்றப்பட்டிருந்தது. ஆனால் அந்த வழக்கு விசாரணைக்கு என்ன நடந்தது? சிறையில் தடுத்து வைக்கப்பட்டிருந்த வைத்தியர் எங்கே?

அதே ஆண்டில் நீர்கொழும்பு வைத்தியசாலையில் புற்றுநோய்க்கு சிகிச்சை பெற்ற சிங்களப் பெண் ஒருவரை பாலியல் வல்லுறவு புரிந்து மாடியில் இருந்து தள்ளிவிழுத்திக் கொலை செய்த சிங்கள வைத்தியர் கைது செய்யப்பட்டு அவருக்கு மரண தண்டனைத் தீர்ப்பும் வழங்கப்பட்டுள்ளது.

யாழ் போதனா வைத்தியசாலையில் 1970களில் அதிகளவில் பணம் சம்பாதித்த சிங்கள வைத்தியர் ஒருவர் கைது செய்யப்பட்டிருந்தார்.

ஆனால் இன்று வரை அவர் மீது உரிய விசாரணை நடத்தப்படவில்லை.

இது மாத்திரமல்ல, வடக்கு-கிழக்கு மாகாணங்களில் இலங்கை இராணுவத்தினரால் பாலியல் வல்லுறவுக்கு உட்படுத்தப்பட்டுப் பல பெண்கள் கொலை செய்யப்பட்டனர்.

அது தொடர்பாகக் கைது செய்யப்பட்ட இராணுவத்தினர் பலர் பிணையில் விடுதலை செய்யப்பட்டுள்ளனர்.

சரணடைந்த மற்றும் கைது செய்யப்பட்ட முன்னாள் போராளிகள் பலருக்கு உடல்களைப் பலவீனப்படுத்தி நோய் ஏற்பட்டு உயிரிழக்கக் கூடிய அளவுக்கு ஊசிகள் ஏற்றப்பட்டதாக இன்று வரை சந்தேகங்கள் உண்டு. ஆனால் அது பற்றி எந்த விசாரணையும் இல்லை. (இந்தத் தகவல் உறுதிப்படுத்தப்பட்டதா இல்லையா என்பது வேறு)

கிளிநொச்சியில் 2012 ஆம் ஆண்டு இராணுவத்தில் சேர்க்கப்பட்ட தமிழ்ப் பெண்கள் பலருக்கு நடந்ததென்ன? இன்று வரை உரிய விசாரணை நடந்ததா?

2009 ஆம் ஆண்டு இறுதிப் போரில் நடந்தது தமிழ் இனப் படுகொலைதான் என்று தமிழ் மக்கள் கூறுகின்றனர்.

ஆகவே இவற்றையெல்லாம் ஏற்க மறுக்கும் இலங்கை அரசாங்கம், குருநாகல் வைத்தியசாலையில் முஸ்லிம் வைத்தியர் ஒருவர் சிங்களப் பெண்களைக் கருத்தரிக்க விடாமல் செய்து விட்டார் என்று குற்றம் சுமத்தி விசாரணை நடத்துகின்ற வேகம் என்ன?



சிங்கள இன விகிதாசாரத்தைக் குறைக்க முஸ்லிம் வைத்தியர் திட்டமிட்டுச் செய்தார் என்று குற்றம் சுமத்துகின்ற சிங்கள அரசியல்வாதிகளும் சிங்கள ஊடகங்களும் 30 ஆண்டுகால போரில் தமிழ் மக்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளுக்கு என்ன பதில் சொல்வார்கள்?

முஸ்லிம் மக்கள் தமிழ் மக்களோடுதான் சேர்ந்து வாழ்ந்தார்கள்- ஆனால் இரண்டு சமூகங்களையும் ஒன்றுடன் ஒன்று மோதவிட்டுக் கூத்துப்பார்த்து ரசித்துப் பிரித்தாளும் தந்திரத்தால் இந்திய, இலங்கை அரசுகள் வெற்றியடைந்தன.

ஈழப் போர் உக்கிரமாக நடந்த காலங்களில் முஸ்லிம் மக்களின் உரிமைக்காகவும் இலங்கை அரசாங்கம் நீலிக் கண்ணீர் வடித்திருந்தது.

ஆனால் இன்று ஸர்க்கான் என்ற ஏவல் கொலையாளியும் அவனது சகாக்களும் உயிர்த்த ஞாயிறன்று செய்த மனிதப் படுகொலைகளுக்காக ஒட்டுமொத்த முஸ்லிம் சமூகத்தையே இலங்கை அரசாங்கம் கருவறுக்கின்றது.

ஈழப் போரின்போதும் 2002 இல் சமாதானப் பேச்சுக்கள் நடந்தபோதும், முஸ்லிம் அரசியல்வாதிகள் சிலரை குறிப்பாகக் கிழக்கு மாகாண முஸ்லிம் அரசியல்வாதிகள் சிலரை அமெரிக்க, இந்திய, இலங்கை அரசுகள் கையாண்ட அணுகு முறையின் பக்க விளைவுகள்தான், ஸர்க்கான் தற்கொலைத் தாக்குதல் நடத்துவதற்குக் காரணம் எனலாம்.

# அகிலம் வாழ் தமிழர்




PROUDLY PRESENTS

IBC த

TORONTO

SPONSORED BY




MELENI DAVID
PERSONAL INJURY LAWYERS

SATURDAY
JUNE 29th @ 5P

BUY YOUR TICKETS NOW
IBCTAMIL.COM/CANADA

அகிலமெங்கும் பரந்து வாழும்ஈழத்தமிழ் மக்களை கலையம்சங்களுடன் அரவணைக்கும் ஐபிசி தமிழா - ரொரொன்டோ 2019

ஜூன் 29ம் திகதி கனடா ரொரொன்டோவில் புகழ் பெற்ற ஸ்கோஸியா பாங் பிரமாண்டமான கலையரங்கிலே அரங்கேறுகின்றது.

இலண்டன், பேர்ண், பரிஸ் என ஐரோப்பிய பெரும் நகரங்களில் நடைபெற்று ஒவ்வொரு நாடுகளிலும் மக்களின் பெரும் வரவேற்பைப் பெற்ற ஐபிசி தமிழா இவ்வாண்டு கனடா தேசத்தில் தளம்கொண்டு ரொரொன்டோ நகரத்தில் அரங்கேறுகின்றது.

ஈழத்தமிழ்க் கலைஞர்களை உலக அரங்கங்களில் தோன்ற வைத்து, அவர்களின் புகழ் நிலைபெறவேண்டும் என்ற எண்ணம் கொண்டு செயலாற்றும் ஐபிசி தமிழ் ஊடகம் கடந்த 2015 முதல் இக்கலைச் செயற்பாட்டை முன்னெடுத்து நடைமுறைப்படுத்தி வருகின்றது.

காண்போர் ஆச்சரியப்படும் வகையில் அபரிமிதமான கலைத்திறமைகளுடன் எம்மத்தியில் வாழ்ந்து வரும் இளம் கலைஞர்களை அடையாளம் கண்டு அரங்கேற்றிப் பெருமைப்படுத்துவது மாத்திரமன்றி அவர்களின் கலைப்பயணம் மிகச் சிறப்பாகத் தொடர்வதற்கும் வழிவகுக்கின்ற செயற்பாடே ஐபிசி தமிழா தொடர் நடவடிக்கை.

மூத்த பெரும் கலைஞர்களும் தமது உயரிய கலைப்பங்களிப்பை மிக மகிழ்வோடு வழங்கி வருகின்றார்கள். அவர்களது அனுபவ முத்திரைகளையும் அவ்வப்பொழுது ஐபிசி தமிழா நிகழும் அரங்கங்களில் பதிவிடுவதிலும் மிகுந்த கவனத்துடன் இயங்கி வருகிறது ஐபிசி தமிழ்.

அன்பிற்கினிய எம்தமிழ் உறவுகளே!

கலை இன்றி வாழ்வீல்லை. கலை இன்றி இனம் இல்லை. கலை இன்றி மொழி இல்லை.

இவை யாவற்றையும் பேண வேண்டியதும், காப்பாற்ற வேண்டியதும் நம் உயரிய கடமை அல்லவா?

எம்மிடமுள்ள பல்லாயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த கலை முதுசங்களைப் பாதுகாக்க வேண்டும். அவற்றை உலக அரங்கங்களில் வெளிப்படுத்த வேண்டும். பழம்பெரும் கலைகளைப் பேணிப்பாதுகாத்து வளர்த்து வரும் எமது பெருமைமிகு கலைஞர்களும், இளம் கலைஞர்களும் இணைந்து படைக்கும் கலை விருந்து ஐபிசி தமிழா - ரொரொன்டோ 2019

நீங்கள் செவிவழி கேட்டறிந்த கலைஞர்கள், சமூகவலைத்தளங்கள் ஊடாக சிறு சிறு கலை அம்சங்கள் வழியாகப் பார்த்து இரசித்த கலைஞர்கள் எனப்பலரை நேருக்கு நேர் சந்திக்கும் அரிய வாய்ப்பு ஜூன் 29ம் திகதி உங்களுக்காகக் காத்திருக்கின்றது

இதோ உங்களுக்கு எதுவித சிரமங்களும் இல்லாமல் உங்கள் அபிமான கலைஞர்களை நீங்கள் கண்டு

# களை அரவணைக்கும்

தமிழ்

# மிழா

POWERED BY

019 IDEAL.VENTURES

EVENT PARTNER









SCOTIABANK ARENA

FOR MORE INFO, PLEASE CALL
416-477-2550

களிப்பதற்கு அரியதோர் வாய்ப்பு ஐபிசி தமிழா ரொரொன்டோ 2019.

ஐபிசி தமிழா பிரமாண்டம் என்பதைச் சொந்தமாக்கி வைத்துள்ளது. ஐரோப்பிய நாடுகளின் பெருநகரங்களில் நடைபெற்ற ஐபிசி தமிழா நிகழ்ச்சிகளைப் பார்த்து மகிழ்ந்த மக்கள் இப்பொழுதும் அந்தப் பிரமிப்பைப்பற்றிப் பேசிய வண்ணமே உள்ளனர்.

ஈழத்தமிழனால் தமது கலைகளைப் பிரமாண்டமாக அரங்கேற்றிப் பெருமைப்படுத்த முடியும், கலைஞர்களை புகழின் உச்சிக்குக் கொண்டு செல்ல முடியும் என்பதைச் சாதித்துக் காட்டி யுள்ள நிகழ்வே ஐபிசி தமிழா.

தமிழ்நாடு சுப்பர்சிங்கர்களுக்கு ஈடாக இப்பொழுது ஐரோப்பிய நாடுகளில் நடைபெற்று வரும் கலை நிகழ்ச்சிகளில் ஐபிசி தமிழ் தங்கத்தமிழ்க்குரல்களாகத் தெரிவாகி விருதுகள் வென்ற பாடகர்கள் பங்கு பற்றிச் சிறப்பிக்கின்றார்கள். இசைப்பிரியர்களின் வரவேற்பைப் பெற்று வருகின்றார்கள். கலை நிகழ்ச்சி அமைப்பாளர்கள் தமிழகத் திரைப்படப் பின்னணிப் பாடகர்களுடன் இணைந்து பாடுவதற்கு ஐபிசி தமிழ் தங்கத்தமிழ்க்குரல் பாடகிகளை ஒழுங்கு செய்து கொள்கிறார்கள். தொழில் நிலைக்கலைஞர்களாக வலம் அவர் வழி பிறந்துள்ளது.

இதே போன்று ஐபிசி தமிழ் நாட்டியத்தாரகைகளும் அரங்கங்களை அலங்கரித்து வருகின்றார்கள் என்பதும் மகிழ்ச்சியளிக்கின்றது.

பிரிட்டன், சுவிற்சர்லாந்து, டென்மார்க், நோர்வே, நெதர்லாந்து, பிரான்ஸ், ஜேர்மனி நாடுகளிலிருந்து கலைஞர்கள் வருகை தருகிறார்கள்.

இத்தனை நாட்டுக் கலைஞர்களையும் நேரில் சந்தித்து கைகுலுக்கும் வாய்ப்பு.

இதனை நீங்கள் தவறவிடக்கூடாது. உங்கள் சொந்தங்களின் உயர்வுக்கும் மகிழ்வுக்கும் ஒத்தாசையாக நீங்கள் திகழவேண்டும்.

அத்துடன் உங்கள் குழந்தைகளையும் ஐபிசி தமிழ் அரங்கேற்றிப் பெருமைப்படுத்துகிறது.

கனடாவில் கலைத்துறையில் ஈடுபட்டு சாதனை புரியும் இளம் நடன, நாடக, இசைக்கலைஞர்கள் ஐபிசி தமிழா பிரமாண்டமான அரங்கில் தோன்றித் தமது கலையாக்கங்களை அளிக்கை செய்வதை நீங்கள் நேரில் கண்டு களிக்கும் அரிய வாய்ப்பு.

ஐரோப்பியநாடுகளில் வாழ்ந்துவரும் ஈழத்தமிழ் மக்களில் பெரும்பாலானோர் தங்களின் இம்முறைக் கோடைகால விடுமுறையை கொண்டாட கனடா நோக்கி வருகிறார்கள் அதன் ஆரம்பம் ஐபிசி தமிழா - ரொரொன்டோ 2019

ஐபிசி தமிழா கலைத்திருவிழா நாள் மிக நெருக்கமாக வந்துவிட்டது. உங்கள் வருகையை, உற்றார் உறவினர் நண்பர்கள் வருகையை உறுதிப்படுத்திக்கொள்ளுங்கள்

## புத்தம் புது பூமி வேண்டும்

இந்தக் காலகட்டத்தில்தான், சேகருக்கு அந்த மர்மமான வயிற்று வலி வந்தது. எவ்வளவோ வைத்தியம் பார்த்தும் அதனைக் குணப்படுத்த முடியவில்லை.

ஆர். கே. சேகரின் உடல்நிலை கெடுவதற்கு ஒரு முக்கியமான காரணம், அவர் ஓய்வில்லாமல் உழைத்துக் கொண்டிருந்ததுதான். வேளாவேளைக்கு ஒழுங்காகச் சாப்பிடாமல், ரொட்டியும் பன்னும் விழுங்கிக்கொண்டு டீயைக் குடித்து உயிர் வாழ்ந்தால், வயிறு வம்பு செய்யாமல் இருக்குமா?

சேகர் இந்த விஷயத்தை உணர்ந்தபோது, ரொம்பத் தாமதமாகிவிட்டது. வயிற்றுப் பிரச்னை மிகவும் தீவிரமாகி, ஒவ்வொரு மருத்துவமனையாக ஏறி இறங்க ஆரம்பித்தார்

'நான் சிறுவனாக இருந்த பருவத்தை நினைக்கும்போது, எனக்குச் சட்டென்று ஞாபகம் வருவது அந்த ஆஸ்பத்திரி வாசனைகள்தான்' என்கிறார் ஏ. ஆர். ரஹ்மான். பல மருத்துவமனைகள், வெவ்வேறு டாக்டர்கள், விதவிதமான பரிசோதனைகள், ஊரில் ஒரு மருந்து, சிகிச்சை பாக்கியில்லை, ஆனாலும் ஆர். கே சேகரின் பிரச்னை தீரவில்லை.

அந்த நிலைமையிலும், ஆர். கே. சேகரால் அமைதியாக ஓய்வெடுக்கமுடியவில்லை. அவர் ஏற்கெனவே ஒப்புக்கொண்டிருந்த படங்களுக்கு இசைக் கோர்ப்பு வேலைகளைச் செய்வதற்காக, சேகரின் உதவியாளர்கள் மருத்துவமனைக்கே வந்துவிடுவார்கள், 'நீங்க நோட்ஸ் சொன்னாதான் சார் எங்க படம் ரிலீஸாகும்' என்று தயாரிப்பாளர்கள் கெஞ்சுவார்கள்.

வேறு வழியில்லாமல், மருத்துவமனைப் படுக்கையில் இருந்தபடி இசைக்குறிப்புகளை எழுதுவார் சேகர். வலி பொறுக்கமுடியாமல் ஒவ்வொரு நிமிடமும் அவருக்கு நரகமாகச் சென்றுகொண்டிருந்தது.

சேகர் வேதனையால் துடிப்பதைப் பார்த்து அவருடைய குடும்பம் மொத்தமும் மௌனமாக அழுதது. அதற்குமேல் அவர்களால் என்ன செய்யமுடியும்?

ஒருகட்டத்தில், மருத்துவர்களிடம் இருந்த நம்பிக்கை போய், தெய்வத்தை நம்ப ஆரம்பித்தார்கள். ஜோதிடம், பூஜை, பரிகாரம் என்று ஏதேதோ முயற்சி செய்து பார்த்தார்கள், கிறித்துவப் பாதிரியார்கள் வந்து ஜெபம் செய்தார்கள், இஸ்லாமியப் பெரியவர்களையும் அழைத்து வந்து பிரார்த்தனை செய்தார்கள், எதற்கும் பலன் கிடைக்கவில்லை

1977ம் ஆண்டு, நாற்பத்து இரண்டு வயதான ஆர். கே. சேகர் மரணமடைந்தார். அவருடைய குடும்பம், அடுத்து என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து நின்றது

ஆர். கே. சேகர் மரணமடைந்தபோது, திலீபுக்கு வயது பதினொன்று.

அதுவரை, சேகரின் மனைவி கஸ்தூரிக்கோ, அவருடைய குழந்தைகளுக்கோ எந்தக் குறையும் இல்லை. பெரிதாகச் செல்வம் வந்து குவியாவிட்டாலும், இருப்பதை வைத்துச் சந்தோஷமாக வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

ஆனால் இப்போது, சேகர் இறந்ததும் அவர்களுக்குக் கிடைத்துக்கொண்டிருந்த வருமானம் அப்படியே நின்றுபோனது. சேமிப்பு என்று கையில் பெரிதாக எதுவும் இல்லை. நான்கு பிள்ளைகளை வைத்துக்கொண்டு இனிமேல் குடும்பத்தை எப்படி நகர்த்துவது என்று புரியாமல் திணறினார் கஸ்தூரி.

ஆர். கே. சேகர் தன்னுடைய வாழ்நாளில் எத்தனையோ சினிமாக்காரர்கள், இசைக் கலைஞர்களைக் கை தூக்கி விட்டிருக்கிறார். அவர்களெல்லாம் இப்போது சேகர் குடும்பத்துக்கு உதவ முன்வந்தார்கள். சேகர், ஸ்தூரியின் உறவினர்கள், நண்பர்களும் தங்களால் முடிந்த உதவிகளைச் செய்தார்கள்.

ஆனால் இதெல்லாம், எத்தனை நாளைக்குப் போதும்? வாழ்க்கை முழுக்க அடுத்தவர்களை நம்பிக் கொண்டிருக்க முடியுமா?

அப்போதுதான், சில உறவினர்கள் கஸ்தூரியை அழைத்துப் பேசினார்கள், 'உன் வீட்டுக்காரரு விதவிதமா என்னென்னவோ இசைக் கருவியெல்லாம் வாங்கிப் போட்டிருக்காரே, அது அத்தனையும் இனிமே வீணாத்தானே கிடக்கப்போவுது? பேசாம ஒரு நல்ல ஆளாப் பார்த்து இதையெல்லாம் வித்துடு, அதுல கிடைக்கிற பணத்தை பேங்க்ல போட்டா, வர்ற வட்டியில நீங்க எல்லோரும் நிம்மதியா உட்கார்ந்து சாப்பிடலாம்'

எதார்த்தமான, நல்ல யோசனைதான்.



# “ஆளப்போறான் தமிழன்”

சுரம் - 6

ஆனால் ஏனோ, கஸ்தூரிக்கு இதில் சுத்தமாக விருப்பம் இல்லை.

ஏனெனில், அவருடைய கணவர் சேகர், காசு, பணம் சேமிக்கவில்லை. இந்த இசைக் கருவிகள்மட்டும்தான் அவருடைய சொர்க்கமாக இருந்தன, இது ஒன்றுதான் அவர் இந்த உலகத்தில் விட்டுச் சென்றிருக்கிற ஒரே சொத்து, இதைப்போய் இன்னொருவருக்கு விற்க முடியுமா? கஸ்தூரி பிடிவாதமாக மறுத்துவிட்டார்.

'ஏம்மா, உனக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? இனிமே இந்த இசைக் கருவிகளையெல்லாம் வெச்சுகிட்டு நீ என்ன செய்யப்போறே?'

கஸ்தூரி அவர்களுக்குப் பதில் சொல்லி நேரத்தை வீணடிக்கவில்லை. நேராகத் தன் மகனிடம் வந்தார், 'அப்பாவோட தொழிலை நீ தொடர்ந்து செய்யணும் திலீப், பெரிய இசையமைப்பாளரா, திறமைசாலியாப் பெயர் வாங்கபம், அதுதான் என்னோட ஆசை, உங்க அப்பா இப்போ உயிரோட இருந்திருந்தா, அவரும் இதையேதான் சொல்லியிருப்பார்'

திலீப் அம்மாவின் விருப்பத்தை மறுக்கவில்லை. அவர் கேட்டுக்கொண்டபடி இசைத்துறையில் தீவிர கவனம் செலுத்த ஒப்புக்கொண்டான்.

ஆர். கே. சேகர் இருந்தவரை, இசை என்பது திலீபுக்கு ஒரு சுவாரஸ்யமான விளையாட்டுமட்டுமே. அதை ஒழுங்காக விளையாடினால், அப்பாவிடம், அவருடைய நண்பர்களிடம், பள்ளி ஆசிரியர்கள், சக மாணவர்களிடமெல்லாம் கைதட்டல் வாங்கலாம். அவ்வளவுதான்.





இதனால், பள்ளியில் ஆனா, ஆவன்னா, அல்ஜீப்ரா, ஜியாக்ரஃபியெல்லாம் படிப்பதுபோல, இசையையும் ஒரு பாடமாக நினைத்துதான் அவன்



கற்றுக்கொண்டிருந்தான். மற்றபடி அதில் சாதனை செய்யவேண்டும், சரித்திரம் படைக்கவேண்டும், சம்பாதிக்கவேண்டும் என்றெல்லாம் அவன் கனவுகூடக் கண்டது இல்லை.

ஆனால் இப்போது, நிலைமை மாறிவிட்டது. அதுவரை பொழுதுபோக்காக இசையைத் தொட்டுக்கொண்டிருந்த திலீப், இப்போது அதனை ஒரு தொழிலாகச் செய்யவேண்டிய கட்டாயத்துக்குள் தள்ளப்பட்டான்.

முக்கியமான விஷயம், இப்போதும் திலீபுக்கு இசைமீது ஆழ்ந்த பற்றுதலெல்லாம் வரவில்லை. குடும்பத்தின் நிலைமை சரியில்லை, வீட்டுச் செலவுகளைச் சமாளிப்பதற்காக, அவன் வேலைக்குப் போகவேண்டும், ஒரு கடையில் பொட்டலம் மடிப்பதுபோல, ஹோட்டலில் தோசை, இட்லி பரிமாறுவதுபோல, இசையும் அவனுக்கு ஒரு தொழில், காசு சம்பாதிப்பதற்கான ஒரு வாய்ப்பு. அவ்வளவுதான்.

'பாவம் திலீப், இந்தச் சின்ன வயதில் அவன் இப்படி வேலைக்குப் போய்ச் சம்பாதிக்கவேண்டியிருக்கிறதே' என்று பலர் பரிதாப்பட்டு உச்சுக்கொட்டினார்கள். ஆனால் திலீப்மட்டும் அப்படி நினைத்து வருத்தப்படவில்லை, சேகருக்குப்பிறகு வீட்டில் அவன்மட்டும்தான் ஆண் பிள்ளை என்பதால், குடும்பத்துக்காகச் சம்பாதிப்பதை அவன் ஒரு கஷ்டமாகவோ, சுமையாகவோ நினைக்கவில்லை, தன் வயதுக்கு மீறிய முதிர்ச்சியுடன் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டான்.

அது சரி, வெறும் பதினொரு வயதான ஒரு சிறுவனுக்கு இசைத்துறையில் என்ன வேலை கிடைக்கும்?

ஆர். கே. சேகர் தன் வீட்டில் ஒரு மினி ஸ்டுடியோவே உருவாக்கிவைத்திருந்தார். ஏகப்பட்ட இசைக் கருவிகள், நவீன எலக்ட்ரானிக் சாதனங்கள், பாடல் பதிவுக்கான உபகரணங்கள் அவரிடம் இருந்தன.

தொடரும்...

இப்பக்கம் உங்களுக்கான களம். இதில் நீங்களே விருந்தினர்கள். சமூக-அரசியல் விடயங்களை தாராளமாக நீங்கள் முன்வைக்கலாம். பதிவாகியிருந்த கருத்துரைக்கு எதிர்வினையையும் ஆற்றலாம். பரஸ்பரம் அனைவருக்குமான ஒரு உரையாடல்களமாக இந்த விருந்தினர் பக்கம் அமைகின்றது.

# உங்கள் கரங்களில் படிந்திருக்கும் அழுக்கினை முதலில் கழுவுங்கள்!



கார்டினல் மல்கம் ரஞ்சித் ஆண்டகை ஈஸ்டர் தாக்குதலின் பின், அப்போதிருந்த கிறிஸ்தவ மக்களின் மனக் கொதிப்புக்குத் தீனி வார்த்து, முஸ்லிம்களுக்கு எதிராக ஒரு வார்த்தை சொல்லி இருந்தால் போதும் முஸ்லிம்கள் மிக மோசமான பாதிப்பை எதிர் கொண்டிருப்பர்.

அப்படி கிறிஸ்தவ மக்களால் முஸ்லிம்களுக்கு எதிராக வன்முறை திரும்பாத, நடைபெறாத காரணத்தால்தான் நீர்கொழும்பில் மீண்டும் கலவரத்தினை தீமூட்டப் பார்த்தனர். அப்போதும் கார்டினல் மிகப் பொறுப்பான பணியை ஆற்றினார்." அதன் பின்பே இனி கிறிஸ்தவ மக்கள் முஸ்லிம்களுக்கு எதிராக திரும்ப மாட்டார்கள், இனித் தாமே களத்தில் இறங்கினால்தான் காரியமாகும் "என்கிற முடிவுக்கு வந்ததன் பின்புதான் மினுவாங்கொட, குருணாகல் பற்றி எரிந்தது.

முள்ளிவாய்க்காலில் இனப்படுகொலை நடாத்திய சிறிலங்கா அரசுக்கு முண்டு கொடுத்து சிங்கக் கொடியையும் தூக்கிக் கொண்டு ஜெனிவா வரை, காவடி எடுத்தது இலங்கை முஸ்லிம் அரசியல் தலைமை, ஆன்மீக தலைமை, புலம்பெயர் அமைப்புகள். ஆயிரக்கணக்கான அப்பாவி மக்களை கூட்டுப் படுகொலை செய்த, இந்த தார்மீகமற்ற அன்றைய அரசாங்கத்திற்கு ஆதரவு அளித்தவர்கள் முதலில் பகிரங்கமாக மன்னிப்பு கேளுங்கள். முஸ்லிம் சமூகத்திற்குள் இருந்து கொண்டு இது தவறு என சொன்னவர்கள், இந்த மக்களின் கொலைகளை ஆதரித்த 'கும்பல்' வெட்கித் தலைகுனியும் வரை இன்னும் இன்னும் சொல்லுங்கள்.

கார்டினல், கண்டி உண்ணாவிரத இடத்திற்கு சென்ற அரசியல் தவறுதான். அதன் மீதான தார்மீக ரீதியான கேள்விகள் இலங்கை கிறிஸ்தவ சமூகத்திடமிருந்து உள்ளார்ந்து முதலில் வருதல் வேண்டும், வணபிதா நந்தன மனதுங்க(கண்டி), மற்றும் கிறிஸ்தவ சமூகத்தினை சேர்ந்த பலர் இதனைப் பகிரங்கமாகக் கண்டிக்கின்றனர், அது மிக முக்கியமானது.

சிறிலங்கா சிங்கள பௌத்த இன, மத அரசியல் கட்டுமானத்திற்கு முஸ்லிம்கள் மட்டுமல்ல, கிறிஸ்தவர்களும் இலக்குத்தான். சிங்கள இனவாத அமைப்புகள் இலங்கையில் கிறிஸ்தவ மக்களுக்குமெதிரான பிரச்சாரத்தினை



கொண்டிருக்கின்றனர். ஈஸ்தர் தாக்குதலின் பின் கிறிஸ்தவ மக்களை தந்திரோபாயமாக நேச சக்தியாக்கி, முஸ்லிம்களை தனி எதிரியாக்கி உள்ளனர். இந்த விடயத்தினை தான் கிறிஸ்தவ மக்களை நோக்கி நாம் சொல்ல வேண்டி இருக்கிறது.

இதை விடுத்து நேற்று கார்டினல் மல்கம் அவர்களை புகழ்ந்தும் இன்று இகழ்வதும் வெறும் மேலோட்டமான உணர்ச்சியின் பாற்பட்டதே. கார்டினல், கண்டி உண்ணாவிரத இடத்திற்கு சென்றது குறித்த முஸ்லிம் உணர்ச்சி கருத்துக்கள் கறாரான அரசியல் விமர்சனங்கள்

## விருந்தினர் பக்கம்

என்றால் அது ஒரு சல்லிக் காசுக்கும் பெறுமதி அற்றது, ஒரு வகையில் அது முஸ்லிம் மக்களின் ஆதங்கம் என்றால் சற்று பொருட்படுத்தத்தக்கது.

முஸ்லிம் சமூக அரசியல் அரங்கிலிருந்து எழக்கூடிய அரசியல், சமூக விமர்சனங்கள் ஒரு போதும் இரட்டை நிலைப்பாட்டுத் தன்மை கொண்டவையாக இனியும் இருந்து விட முடியாது என்பதற்காகவே இந்த இடத்தில் இதனை நாம் சுட்டிக் காட்டுகிறோம். தமக்கு என்று ஒரு விமர்சனப் பார்வையும், வெளியில் இருந்து நடப்பதற்கு மற்றுமொரு விமர்சனப் பார்வையையும் கொண்டிருப்பது மிக அபத்தமானது.

"அறிவுடையோருக்கு இது அத்தாட்சியாகும்".

# ஈழத்துக் கலைஞர்களைப் பெருமைப்படுத்திய நாதவினோதம்



யாழ். பருத்தித்துறை ஹாட்லிக் கல்லூரி பழைய மாணவர் சங்கம் ஐக்கிய ராஜ்யக் கிளையினர் கடந்த 26.05.19 ஞாயிற்றுக்கிழமை அன்று லண்டன்



வோட்டெர்ஸ்மித் மண்டபத்தில் நிறைவான இரசிகர் அவையில் முழுமையான இசைவிருந்தை நாத வினோதமாக அள்ளிப்பருக வைத்தார்கள்.

நாதவினோதம் முற்று முழுதாக ஈழத்துக் கலைஞர்களை உள்ளடக்கியிருந்தமை பெருமைப் படவைத்தது.

தமிழகக் கலைஞர்கள் வந்தால்தான் கலை நிகழ்ச்சிக்கு மக்கள் வருவார்கள் அவ்வாறு இல்லையெனில் மண்டபத்தை நிறைக்க முடியாது என்ற கருத்தைப் பொய்யாக்கி நிகழ்ச்சியை வெற்றிகரமாக நடத்தியுள்ள பருத்தித்துறை ஹாட்லிக் கல்லூரி பழைய மாணவர் சங்கம் ஐக்கிய ராஜ்யக் கிளையினர் பாராட்டுக்குரியவர்கள்.



பேச்சுக்கு அதிக நேரம் ஒதுக்காமல் நிகழ்ச்சிகள் சிறப்பாக அமைய நேர்த்தியாகத் திட்டமிட்டிருந்தமை வரவேற்புக்குரியது.

அரங்கை அலங்கரித்த முதல் நிகழ்ச்சி ஐபிசி தமிழ் தங்கத் தமிழ்க்குரல்-2016 செல்வி. ஸ்ருதிசுரேசன் அவர்களின் ஹவாய்ன்கிற்றார் - lap steel guitar இசைக்கோலம்.

இந்த இசைக் கருவியை மீட்டி வருவோர் மிகச்சிலரே. ஈழத் தமிழ்க்கலைஞர்களுள் தெரிந்தவரை அமராகிவிட்ட யாழ். ரி.சீலன் அவர்கள்தான் 1970களின் நடுப்பகுதியில் ஹவாய்ன்கிற்றாருடன் யாழ்மண்ணில் வலம்வந்தார்.

இந்த வாத்தியத்தியத்தில் சுரக்குறியீடுகள் இல்லை, அனுமானத்திலேயே வாசிக்க வேண்டும். அவ்வாறு இந்த வாத்தியத்தை மீட்டுவதற்கு மிகச்சிறந்த இசைஞானம் இருக்க வேண்டும்.

சீலன் அவர்களின் மாணவி செல்வி ஸ்ருதிசுரேசன் அவர்கள் தனது குருவிடம் கற்றதை மென்மேலும் மெருகூட்டி மிக அற்புதமாகப் பாடல்களை இசைத்தார். எல்லோரும் மெய்மறந்து இரசித்தார்கள்.

அடுத்து, இலண்டனில் இசைத்துறை வரலாற்றில் இடம் பிடித்துள்ள றெயின்போ இசைக்குழுவினர், தாயகக் கீதங்கள் பலவற்றின் இசையமைப்பாளர், அமரர்யாழ். ரி.சீலன் அவர்களது மாணவர் இசைப்பிரியன் அவர்களை நாதவினோதம் நிகழ்ச்சிக்கு சுரத்தட்டு (கீபோட்) இசைப்பதற்கு அமர்த்தியிருந்தனர்.

ஈழத்தில் இப்பொழுது ஒரு சௌந்தரராஜன் இருக்கிறார் என்றால் அவர் பாடகர் என். ரகுநாதன் அவர்கள்.



ஒவ்வொரு பாடல்களையும் மிக உயிரோட்டமாகப் பாடினார்.

மீண்டும் மீண்டும் என்.ரகுநாதன் பாட வேண்டும் என்று இரசிகர்கள் குரல் எழுப்பினார்கள்.

றெயின்போ இசைக்குழுவின் பாடகர்கள் சிறிபதி-பாரதி, சுப்பர் சிங்கர் ஜசிக்கா (கனடா), சுப்பர் சிங்கர் நிருஜன் (ஜேர்மனி), ஐபிசி தமிழ் இளையோர் தங்கத் தமிழ்க்குரல்-2018 தேனுகா (லண்டன்), இளையோர் தங்கத் தமிழ்க்குரல்-2018 விபூர்ணன் (சுவிற்சர்லாந்து), ஐபிசி தமிழ் தங்கத் தமிழ்க்குரல்-2016 நவீனா பிரணவரூபன் (லண்டன்) ஆகிய இளம் பாடகர்களின் பாடல்கள் மக்கள் மனங்களை வெகுவாகக் கவர்ந்தன.

இவ்வளவு அபரிமிதமான திறமைகள் வாய்ந்த எமது கலைஞர்களை அரங்கில் வலம் வரச்செய்த நிகழ்ச்சி அமைப்பாளர்களான பருத்தித்துறை ஹாட்லிக் கல்லூரி பழைய மாணவர் சங்கம் ஐக்கிய ராஜ்யக் கிளையினரின் இச்செயற்பாடு மிகவும் வரவேற்கத்தக்கது.

ஐபிசி தமிழ் ஊடகத்தின் ஒலிபரப்பாளர் யோகா தினேஸ் நிகழ்ச்சியை அழகாகத் தொகுத்தளித்தார்.

இது போன்றே அடுத்த ஆண்டிலும் நாத வினோதம் இன்னும் பல நம்தேசக் கலைஞர்களுடன் நடைபெற வேண்டும்.

# PTR DOORS & WINDOWS

## OVER 14 YEARS EXPERIENCE

RESIDENTAL & COMMERCIAL



### TRIBLE GLASS WINDOWS




### DOUBLE GLASS WINDOWS



- Custom Doors & Windows
- Front Door & Patio Door
- Replacement (Doors & Windows)
- Separate Entrance Door for Basement
- Replace Caulking
- Painting
- Pot Lights Installation

**FREE ESTIMATE!** Call Today













**CALIFORNIA SHUTTERS & BLINDS**

**Ravi : 416-825-9482**
**Kanna : 647-297-7815**
**Email : ptrrenovation@gmail.com**




We Fixed Broken Glass Windows & Doors

# வாகன விபத்தில்
## பாதிக்கப்பட்டுள்ளீர்களா ?

உங்களுக்கான சட்ட உரிமைகள் தெரியுமா?

# கட்டணம்
# எதுவுமின்றிய சேவை

**வார, மாத, இறுதிக் கொடுப்பனவுகளில்**
**இருந்து கட்டணம் அறவிடப்படமாட்டாது**

**எழுத்தில் உத்தரவாதம் தரப்படும்**

**தொடர்புகளுக்கு**
**சதீஸ்சன் குமாரசாமி**

# 416-723-7387

info@prudentiallegalservices.com

# IBC தமிழா

## — TORONTO 2019 —

# வெறும் கலை நிகழ்வல்ல!

கனேடிய தமிழ்ப்பரப்பில் 'ஐ.பி.சி தமிழா - ரொறன்ரோ' நிகழ்வு பற்றிய அவதானிப்பு கூர்மை பெற்றிருக்கும் நிலையில், இப்பெருநிகழ்வினை வெறும் கலை நிகழ்வாக மட்டும் சுருக்கிவிடமுடியுமா என்ற கேள்வி எழுகின்றது.

ஆயிரம் கலைஞர்கள் தமது திறன்களை வெளிக்கொணருகின்ற ஒற்றைப் பெரும்மேடை என்பதற்கு அப்பால், கனடா எனும் தேசம் புலம்பெயர் ஈழத்தமிழ் உலகில் பெறுகின்ற முக்கியத்துவமும், புலம்பெயர் தமிழர்களின் சமூக- அரசியலில், கனேடிய தமிழ்ச்சமூகத்தின் வகிபாகத்தினையும், ஐ.பி.சி தமிழாவோடு பொருத்திப் பார்க்க வேண்டியுள்ளது

அந்தவகையில் கனடாவின் பெருநகர் ரொறன்ரோவில் எதிர்வரும் ஜூன் 29ம் நாள் இடம்பெற இருக்கின்ற ஐ.பி.சி தமிழா நிகழ்வானது, புலம்பெயர் தமிழர்களின் சமூக-அரசியலில் வகிக்கப் போகின்ற பாத்திரம் என்ன?

இதற்கான விடையினை புரிந்து கொள்வதற்கு கனேடிய தமிழ்பரப்புக்குள் காலடி வைப்போம்

மூன்றாம் தலைமுறையினை தொட்டுவிட்ட புலம்பெயர் ஈழத்தமிழ் சமூகத்தின் சமூக-அரசியல் வலுமையமாக (Political - Social Power Center), கனடா மாறி வருகின்றது 5 இலட்சத்துக்கும் மேற்பட்ட ஈழத்தமிழர்கள் வாழ்கின்ற ஒரு வெளிநாடு என்ற வகையில், இந்த லட்சத்தின் அடிப்படையில் மட்டும் கனேடிய தமிழ் சமூகம் வலுமையமாக மாறவில்லை. அதற்கும் அப்பால் பல காரண்கள் காணப்படுகின்றன.

கனேடிய அரசு, தனது குடிமக்களுக்கு வழங்கிய சமூக-அரசியல் வாய்ப்புக்களை கெட்டியாக பிடித்துக் கொண்ட தமிழர்கள், அதனை தமது நலன்சார்ந்த சமூக-அரசியல் வளர்ச்சிக்கு உரிய முறையில் கையாண்டு வருகின்றனர்.

நாடாளுமன்ற உறுப்பினர்களையும், மாநில, நகர சபை உறுப்பினர்களையும் என்று, கனேடிய அரசியல் நீரோட்டத்தில் தம்மை 'கனேடிய தமிழர்களாக' ( Canadian Tamils) தம்மை அடையாளப்படுத்தி வருவதோடு, கனடாவின் முக்கிய கட்சிகளிலும் பிரதான இடத்தினை தமிழர்கள் பெற்று வருகின்றனர்

ஜனநாயக நீரோட்டத்தில் மென்சக்தியாக (Soft Power) அமைகின்ற தேர்தல் பொறிமுறையில், வாக்குகள் என்பது வன்சக்தியாக ( Hard Power) இருக்கின்றன.

வாக்களிக்கும் ஒவ்வொருவரதும் வாக்குகள் என்பது, ஆட்சியை அல்லது அரசியலை தீர்மானிக்கின்ற வன்சக்தியாக இருக்கின்ற நிலையில், கனேடிய தமிழர்களின் வன்சக்தி என்பது இங்கே மிக முக்கியமானது.

அந்தவகையில்தான் சமீபத்தில் மே-18 தமிழினப் படுகொலையினை(Genocide) கனடாவின் சிறு பெரு நகர பல மன்றங்களில் பலவும் அங்கீகரித்து தீர்மானங்களை நிறைவேற்றி இருப்பதானது, கனேடிய தமிழர் சக்தியின் பலத்தை வெளிக்காட்டுகின்றது

முன்னராக தமிழர்களின் பண்பாட்டு பெருநாளாகிய தைத்திருநாளினை, கனேடிய அரசியல் மன்றங்கள் பலவும் தமிழர்களின் மரபுத்திங்களாக அங்கீகரித்துள்ள தீர்மானங்கள் நிறைவேற்றியிருந்தன.

பண்பாட்டுத்தளத்திலும், அரசியல் தளத்திலும் பெற்று வரும் இந்த அங்கீகாரங்கள் என்பது, கனடாவில் ஈழத்தமிழர்கள் முக்கிய (Power) சக்தியாக மாறிவருகின்றனர்.

இலங்கைத்தீவில் இருந்து போர் காரணமாக வெளியேறிய மக்கள் கூட்டம், அகதிகளாக அலைந்துழன்றது. இன்று புலம்பெயர் தமிழர்கள் (Diaspora) [illegible] மொழியுடன் பெரும் சக்தியாக மாறியுள்ளனர்

இந்த சக்தியின் [illegible] கனடாவில் இடம்பெற இருக்கின்ற [illegible] நிகழ்வினைக் [illegible]

[illegible] உற்சாகப்படுத்தவும் [illegible] பெரும்சக்தியின் [illegible] கலைஞர்கள் [illegible] சமூகத்தின் மற்றுமொரு மிடுக்கை [illegible] அங்கீகாரத்தினை ஏற்படுத்துகின்றது

மென்சக்தி

பொருளாதார, வர்த்தக, கல்வி இராஜதந்திர [illegible] என பல்வேறு கட்டுமானங்களை துறைசார் முறையில் வளர்த்தெடுப்பதனை 'மென்சக்தி' என குறிப்பிடலாம்

இந்த மென்சக்தி திரளும் போது, அது அந்த இனத்தின் வன்சக்தியாக உருப்பெறும்

இதுதான் அரசியல்

அவ்வகையில், 2009ம் ஆண்டுக்கு பின்னரான, புலம்பெயர் தமிழ் சமூகத்தின் வளர்நிலையினை ஐபிசி தமிழின் பிரித்தானியா, சுவிஸ், பிரான்ஸ் ஐபிசி தமிழா நிகழ்வுகள் ஊடாக மதிப்பீடு செய்யும் போது இதன்சக்தி புரியும்

தற்போது கனடாவில் இச்சக்தி திரளவுள்ளது

இது புலம்பெயர் தமிழர்களின் மென்சக்தியின் ஓர் குறியீடாக ஐ.பி.சி தமிழா கனடா மாற வேண்டும். மாறும்!

- சுதன்ராஜ்

# வானொலி அகவை 22




தாயகம்,புலம்பெயர் தேசங்களில் வாழும் எம் தமிழ் உறவுகள் உள்ளங்களில் நிலைபெற்ற வானொலி ஐபிசி தமிழ்.

1997 ஜூன் மாதம் 9ம் திகதி பிரிட்டன் தலைநகர் இலண்டன் மாநகரத்திலிருந்து எம் தமிழ் உறவுகளே என உரிமையுடன் அழைத்து ஆரம்பமானது.

செய்மதி வழியாக ஒலிபரப்பை வழங்கிய இந்த வானொலி இந்த அளவுக்கு மக்கள் மனங்களை வெல்லும் என்று அன்று யாரும் எதிர்பார்க்கவில்லை. மக்களையும் மண்ணையும் நேசித்து ஆற்றும் ஊடகப்பணியில் ஐபிசி தமிழ் தனித்துவமாகியது.

தாயகத்தைவிட்டுப் புலம்பெயர்ந்து ஏதிலிகளாக ஐரோப்பா, கனடா, ஒஸ்ரேலியா எனப்பரந்து விரிந்த எமது தாயக உறவுகளைத் தங்கத்தமிழால் தாலாட்டும் தமிழ்ப்பணியையும் ஐபிசி தமிழ் மேற்கொண்டு வருகிறது.

குழந்தைகள் முதல் மூத்தோர் வரை நேசித்து வரும் இந்த ஊடகம் கடந்த காலங்களில் மிகவும் கடினமான பாதைகள் ஊடாகவே பயணப்பட்டது.

எழுத்து ஊடகம், இலத்திரனியல் ஊடகம் என வருகின்ற போது, அவற்றை இயக்குவது என்பது பல யானைகளைக்கட்டி வைத்துத்தீனி போடுவது போன்ற பொருள் செலவை ஏற்படுத்தும் என்பது ஊடகத்துறை அனுபவம் உடையவர்களுக்குத் தெரிந்த விடயம்.

நாடகர்-ஏடகர்-ஊடகர் ஏ.சி.தாஸீஸியஸ் அவர்கள் பல்வேறு சிரமங்களுக்கு மத்தியில் குறிப்பிட்ட சில பங்குதாரர்களின் ஒத்துழைப்புடன் இதனை ஆரம்பித்திருந்த போதிலும் பல சிரமங்களுடனேயே நிறுவனம் இயங்கிவந்தது.

ஏ.சி.தாஸீஸியஸ் அவர்களை அடுத்து சி.சிவரஞ்சித் அவர்கள் பொறுப்பு வகித்தார்.

இவரது பணிக்காலத்தில் ஐபிசி தமிழ் எழுச்சி கொண்டது என்பது வரலாறு. பல்வேறு துறைசார்ந்தவர்கள், வெவ்வேறு தளங்களில் நின்றவர்கள் எல்லோரையும் ஒருங்கிணைத்து ஐபிசி தமிழ் ஒலி ஊடக வாயிலாகத் தரமான நிகழ்ச்சிகள் நடைபெற்றுவந்தன.

தொடர்ந்து ரமணன் அவர்கள் பொறுப்புக்கு வந்தார். சிறிது காலம் அவரும் ஐபிசி தமிழ் வானொலியின் பாரங்களைச் சுமந்தார்.

இவருக்குப் பின்னர் நாதன் (ரகு) அவர்கள் பொறுப்புக்கு வந்தார். இவர் பொறுப்புக்கு வந்த சில மாதங்களில் முள்ளிவாய்க்கால் பேரவலம் நிகழ்ந்தது.

நிறுவனத்தைத் தொடர்ந்து நிர்வகிக்க முடியாத நிலையில் அவர் தனது பொறுப்பிலிருந்து விலகிச் சென்றார்.

தாஸீஸியஸ் அவர்கள் காலத்தில் அவருக்குக் கைகொடுத்து அப்பொழுது ஐபிசி தமிழ் வானொலியை நடத்தி வந்த தமிழ் மீடியா லிமிட்டெட்டில் பங்குதாரர்களாக விளங்கியவர்களில் தேவசகாயம் அவர்கள், ஜெயம் அவர்கள், கால்ரன் லெசர் தேவா அவர்கள் நிர்வாகப்பொறுப்பை ஏற்று ஐபிசி தமிழ் வானொலி நின்று போய்விடாமல் பாதுகாக்க முன்வந்தார்கள். அதில் தேவா, ஜெயம் ஆகியோர் சேர்ந்து பணிகளை முன்னெடுத்தனர்.

ஓரிரு மாதங்களில் முழுப்பொறுப்பினையும் ஜெயம் அவர்களே கவனித்து வந்தார். அவராலும் தொடர முடியாமல் போனது. தமிழ் மீடியா லிமிடெட்டின் முன்னாள் பங்குதாரர்களில் ஒருவரான சத்தி எஸ்ரேற் உரிமையாளர் சத்தி அவர்கள் ஜெயம் அவர்களுக்குப் பணம் கையளித்து ஐபிசி தமிழ் வானொலி நிறுவனத்தை 2010ம் ஆண்டில் வாங்கிக் கொண்டார். 2014 ஜனவரி வரை இயக்கி வந்தார். மேலும் தொடரமுடியாத நிலைக்கு உள்ளான சத்தி அவர்கள் நிறுவனத்தை பரா பிரபா அவர்களுக்கு விற்றார்.

2014 பெப்ருவரியில் ஐபிசி தமிழ் நிறுவனம் கந்தையா பாஸ்கரன் அவர்களுக்கு விற்கப்பட்டது.

ஐபிசி தமிழ் வானொலியின் நேயராக இருந்து பல்வேறு நிகழ்ச்சிகளைக் கேட்டு வந்த கந்தையா பாஸ்கரன் அவர்கள் இந்த வானொலி வான்பரப்பில் நிலைபெற்று, தமிழ் மக்களுக்குத் தொடர்ந்து சேவையாற்ற வேண்டும் என்று எண்ணம் கொண்டார்.

பல்வேறு திட்டங்களை வகுத்தார். பெருந்தொகைப்பணத்தை முதலிட்டார்.

2015ல் ஒலி ஊடகத்துடன் ஒளி ஊடகத்தையும் ஆரம்பித்தார்.

நவீன ஒலிபரப்பு சாதனங்களுடன் சர்வதேசத் தரத்திலான ஒலிபரப்பு,ஒலிப்பதிவுக்கூடங்கள் இலண்டன் தலைமைக் கலையகத்தில் அமைந்தன.

ஐபிசி தமிழ் குழுமத்தின் அதிபராக விளங்கிவரும் கந்தையா பாஸ்கரன் அவர்கள் 2018 ஜனவரி 31ம் திகதி தாயகத்தில் கலையகமொன்றை யாழ்ப்பாணத்தில் அமைத்தார். அங்கிருந்து நாள்தோறும் நேரடியாக வானொலி நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

இளம் ஒலிபரப்பாளர்கள் மிகச்சிறப்பாகப் பணியாற்றிவருகின்றனர். 2019 இவ்வாண்டில் கனடாவிலும் கலையகம் அமையப் பெற்றுள்ளது. விரைவில் அங்கிருந்தும் வானொலி நிகழ்ச்சிகள் மலரும்.

வானொலி எப்பொழுதும் உங்களுக்கு எந்த இடையூறும் தராத நல்ல நண்பன். வானொலி ஒலிபரப்பைக் கேட்பதற்கு நீங்கள் தனியாக நேரம் ஒதுக்க வேண்டியதில்லை. உங்கள் பணிகளில் ஈடுபட்ட வண்ணமே வானொலி நிகழ்ச்சிகளை நீங்கள் கேட்கலாம்.

பலவிதமான விம்பங்களை ஒரே நேரத்தில் உங்கள் உள்ளங்களில் பதிய வைக்கும் சக்தி வானொலி ஒலிபரப்புக்கு மாத்திரமே உள்ளது.

LW-SW-MW போன்ற அலைவரிசைகள் இப்பொழுது இல்லாமல் போய்விட்டன. அதே வழியில் FM அலைவரிசையும் நிறுத்தப்பட்டு வருகின்றன. நோர்வே, பிரான்ஸ் போன்ற நாடுகள் எவ்.எம் அலைவரிசையை முடிவுக்குக் கொண்டு வருவதில் முன்னிற்கின்றன.

இப்போது யாவும் டிஜிற்றல் மயம். ஐபிசி தமிழ் வானொலி இலண்டனில் DAB வழியாக ஒலிபரப்பாகின்றது.

உலகப்பரப்பெங்கும் இன்ரெர்நெற் வழியாக ஒலிபரப்பாகின்றது.

இந்த 22ஆண்டுகள் ஐபிசி தமிழ் வானொலியுடன் இணைந்து பயணப்படும் அன்பு நிறை நேயர்களுக்கும், வானொலியின் வர்த்தகப்பிரிவுக்கு விளம்பரங்கள் வழங்கி கை கொடுத்து வரும் வர்த்தகப் பெருமக்களுக்கும் உளமார்ந்த நன்றி!

- எஸ்.கே.ராஜென்.



"HE'S FRIENDLY, KNOWLEDGEABLE AND EXPERIENCED!



CONTACT TODAY

**NATHEESH PARAMESHVARAN**
REAL ESTATE BROKER




RE/MAX COMMUNITY
Realty Inc., Brokerage

**C: 647-545-8462**
203-1265 Morningside Ave, Toronto, ON

natheesh@remaxcommunity.ca | www.realtornatheesh.ca



# நோர்மண்டி தரையிறக்கம் 75 ஆண்டுகள்!



உலகின் பெரு வரலாறாக நோர்மண்டித் தரையிறக்கம் பதிவாக முன்னர் அமெரிக்கத் தளபதியாக இருந்த ஜெனரல் ஐசனோவர், ஒருவிடயத்தை சொன்னார். 1944 இல் கூறப்பட்ட அந்த வரலாற்று வார்த்தைகள். 75 ஆண்டுகள் கடந்தும் இன்றும் உயிர்த்துடிப்புடன் இருக்கின்றன.

இது மாற்றுத்திட்டங்கள் குறித்து சிந்திக்கமுடியாத ஒரு நடவடிக்கை. இது வெற்றிக்கான ஒரு நடவடிக்கை. அவ்வாறான வெற்றிவழியில் தான் அது நடக்கும். நாங்கள் வெற்றிக்காகவே செல்கிறோம், கிட்டும் வாய்ப்புகள் எல்லாவற்றையும் நாம் பிரயோகிப்போம். இதனூடாக வெற்றியை தட்டிக்கொள்வோம்.

இதனைச் சொன்ன ஜெனரல் ஐசனோவர் இன்று உயிருடன் இல்லை அதுபோல நோர்மண்டி தரையிறக்கத்தின் அரசியல் சக்திகளாக இருந்த அன்றைய அமெரிக்க அரசுத்தலைவர் பிராங்ளின் அன்றைய பிரித்தானியாவின் போர்க்காலத் தலைவர் வின்சன்ட் சேர்ச்சில், கிழக்கு முனை நாயகனான சோவியத்தலைவர் ஜோசப் ஸ்ராலின் ஆகியோர் இன்று உயிருடன் இல்லை.

ஆனால் இந்த உலகில் D-DAY என்ற அடையாளம் இன்று 75 ஆண்டுகள் கடந்தும் நினைவில் நிலைத்துள்ளது.

உலகின் வரலாற்றில் அன்று மிகப்பெரிய ஆதிக்கத்தைச் செலுத்திய நாசிகளின் அடையாளத்தை துடைக்க பெரும் எதிர்பார்ப்புடன்; மேற்கொள்ளப்பட்ட பாரிய தரையிறக்கத்தின் மிகப்பெரிய கதை இந்த



D-DAY அடையாளத்தின் பின்னால் உள்ளது. இது வர்ணிக்க முடியாத துன்பியல், அளவற்ற தியாகம் வீரம் போன்ற கலவைகளுடன் உள்ளது.

கடந்த 6 ஆந் திகதி பிரான்சில் நோர்மண்டி தரையிறக்கத்தின் 75 ஆம் ஆண்டு நினைவு கூரப்பட்டபோது

சமகால உலகத்தலைவர்களான அமெரிக்க அரசதலைவர் டொனால்ட் ட்றம்ப் பிரெஞ்சு தலைவர் இமானுவேல் மக்ரன். பிரித்தானிய இளவரசர் சார்ள்ஸ் பிரதமர் திரேசா மே ஏனைய உலகப்பிரமுகர்கள் என பெரும் பிரபல்ய முகங்கள் நோர்மண்டிக்கரைகளில் நன்றிக்கடன்பட்டு நின்றன.

தியாகங்களுக்குரிய நன்றியுரைகளும் தரை -வான் அணிவகுப்புக்களும் அங்கு இடம்பெற்றன.

ஆனால் இவ்வாறு விழாக்கோலமாக நின்ற இதே நோர்மண்டிக்கரை 75 வது ஆண்டுகளுக்கு முன்னர் பெரும் ரண களப்பட்டு நின்றதே பெரும் வரலாறு. உலகின் போர் வரலாற்றில் D-DAY என்ற குறியீட்டுக்குரிய இந்த நோர்மாண்டி தரையிறக்கம் தான் இன்றளவும் மிகப்பெரும் நீரியல் படையெடுப்பு பதிவுக்குரியது. உலகின்







போர்வரலாறு இன்று வரை இந்தப்பதிவை முறியடிக்கவில்லை.

தமிழினம் வேண்டுமானால் தமது போரியல் வரலாற்றில் ஓயாத அலைகள் 3 இல் கடற்புலிகளின் குடாரப்பு தரையிறக்கத்தை (மிகச் சிறிய) நோர்மண்டியாக



நினைவூட்டிக்கொள்ளலாம். ஓயாத அலைகள் 3 இடம்பெற்றபோது கடற்புலிகளும்; நோர்மண்டி தரையிறக்கம் போன்ற ஒரு குட்டித்தரையிறக்கத்தை இத்தாவில், வத்திராயன் குடாரப்புபகுதியில் செய்து சிறிலங்காப்டையினரை திக்குமுக்காடவைத்திருந்தனர்

குடாரப்பு தரையிறக்கமும் அதன் பின்னர் கேர்ணல் பால்ராஜ்ஜின் தலைமையில் நடந்த இத்தாவில் சமரும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை.

குடாரப்பில் தரையிறங்கிய புலிகளின் படையணிகள் இத்தாவில் பகுதியில் நிலையெடுத்தன. சரியான வினியோக வழிகள் இன்றி பல்லாயிரம் சிறிலங்கா படையினக்கு நடுவில் நின்று சுமார் 1500 விடுதலைப்புலிகள் பல வாரங்கள் சமர் செய்தனர்.

நோர்மண்டிக்கரை இப்போது அமைதியான ஒரு கடற்கரையாக இருந்தாலும் 75 வருடங்களுக்கு முன்னர் யூன்மாதம் ஆறாம் திகதி மட்டும் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட படையினரை ஒட்டுமொத்தமாக பலிகொண்ட கடற்கரை அது. நாசிப்படைகளின் கட்டுப்பாட்டில் இருந்த நோர்மண்டியை ஊடறுத்து அவர்களை முறியடிக்கும் வகையில் கூட்டுப்படையினர் ஆரம்பித்த இராணுவ நடவடிக்கையின் பெயர் ஒப்பரேசன் ஓவர்லோர்ட்.

தாங்கமுடியாத பளு என்ற அர்த்தப் படுத்தலுக்குரிய குறியீட்டுப்பெயருடன்; ஆரம்பித்த இந்த நடவடிக்கை இருதரப்பு



படையினரின் காவுகொள்ளல்களிலும் பெரும் துன்பியலுக்குரிய ஓவர்லோர்ட்டாக மாறியது.

ஒப்ரேசன் ஓவர்லோட் நடவடிக்கை இரண்டு கட்டங்களாக நடைபெற்றது.

முதலாவது நடவடிக்கை பிரித்தானிய மற்றும் அமெரிக்க வான்வழி தரையிறக்கமாக இடம்பெற்றது இந்த நடிவடிக்கை மூலம் சுமார் 24,000 துருப்புகள் 1944 ஜுன் 5 ஆந்திகதி பின்னிரவு முதல் ஜூன் 6 ஆந்திகதி அதிகாலைவரை நோர்மண்டி பிராந்தியங்களில் தரையிறங்கினர். இதற்காக 1,200 வான்கலங்கள் பயன்படுத்தப்பட்டன. இதுதான் இன்றுவரை உலகில் அதிக வான்கலங்கள் பங்கெடுத்த போர்நடவடிக்கை.

இதன்பின்னர் இரண்டாவது நடவடிக்கை நீர்வழித்தரையிறக்கமாக ஆரம்பமானது. ஜூன் 6 அதிகாலை பிரித்தானியக்கரைகளில் இருந்துபிரான்சைநோக்கிஇந்தநடவடிக்கை ஆரம்பமானது. தரையிறக்க கடற்கலங்கள் கப்பல்கள் என 7000 கடற்கடலங்கள் இந்த பாரிய தரையிறக்க நடவடிக்கையில் பங்கெடுத்தன.

கடற்கலங்கள் ஊடாக பீரங்கிவண்டிகள், கவச வாகனங்கள் துருப்புக்காவிகள் என பத்தாயிரத்துக்கு மேற்பட்ட வாகனங்களும் ஒரேநாளில் கொண்டுசெல்லபட்டன. மொத்தமாக 1,56,000 படையினர் தரையிறக்கப்பட்டனர்.

சுமார் 80 கிலோமீற்றர் நீளமுள்ள நோர்மண்டிக்கரையில் ஒமாகா, யூட்டா, கோல்ட், ஜூனோ மற்றும் சுவார்ட். ஆகிய இடங்களில் சிலமணிநேரங்களில் இந்த 1,56,000 படையினரும் தரையிறங்கினர். இதனையடுத்து நோர்மண்டிக்கரைகளில் பெரும் சமர் வெடித்தது. முதல்நாளில் மட்டும் இரண்டு தரப்பிலும் பத்தாயிரத்துக்கு மேற்பட்ட படையினர் கொல்லப்பட்டனர். முதல் நாளின் இந்த பெருஉதிரக்களமே அடுத்துவரும் நாட்களில் எவ்வாறு சமர் இடம்பெறப்போகின்றது என்பதை நாசகார கட்டியமாக வெளிப்படுத்தியது.

D-DAY நாள் முதல் ஓகஸ்ற் முடிவுவரை நடந்த சமர்களில் இரண்டுதரப்பிலும் 5 லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் கொல்லப்பட்டனர்- காயமடைந்தனர்- அல்லது காணாமல் போயினர். இதில் கூட்டுப்படையினரின் இழப்பு மட்டும் 2லட்சத்து 9,000. ஜேர்மனியத்தரப்பில் 2லட்சத்து 50,000க்குமேல்.

இதில் 28 ஜேர்மனிய ராணுவ ஜெனரல்களும் அடக்கம். இதற்கும் அப்பால் 2 லட்சத்துக்கு



மேற்பட்ட ஜேர்மனியப்படையினரை கூட்டுப்படையினர் போர்க்கைதிகளாக சிறைப்பிடித்தனர்.

இதேபோல நோர்மண்டி தரையிறக்கத்துடன் வெடித்த போரில் சுமார் பதினையாயிரம் நோர்மண்டி குடிமக்கள் கொல்லப்பட்டனர்.

ஆகமொத்தம் உலக சரித்திரத்தில் மிகப்பெரும் எதிர்பார்ப்புடன்; மேற்கொள்ளப்பட்ட இந்த டி டே தரையிறக்கம் உலகின்போர்வரலாற்றில் என்றென்றும் பெரும் பதிவுக்குரியதாகவே நிலைத்திருக்கட்டும்

அதுபோல நோர்மண்டித்தரையிறக்க பதிவை முறியடிக்கும் வகையில் இன்னொரு போர்ப்பரணி நகர்வுகள் இடம்பெறாமல் இருக்க உலகின் மனுக்குலம் பிரார்த்திக்கட்டும்.

- பிறேம்.



# இளம் சமூகம் எதிர்கொள்ளும் விவாகரத்து!!!!

பகுதி - 4

கணவன் - மனைவி இடையே ஏற்படும் இன்றைய இல்லற சிக்கல்களுக்கு முக்கிய காரணமாக உருவெடுத்துக் கொண்டிருக்கின்றன சமூக வலைத்தளங்கள். எங்கோ மூலை முடுக்குகளில் இருப்பவர்களை ஒன்றிணைப்பதாக கூறப்படும் சமூக இணைய தளங்கள் ஒரே வீட்டில், ஒரே அறையில் இருக்கும் தம்பதிகளை பிரித்துவிடுகிறது. இளம் பெண்கள், காதலால் கற்பிழப்பது, தற்கொலை செய்வது, மானபங்கப்படுவது போன்ற சம்பவங்கள் ஒருபுறம் நடந்து கொண்டிருக்க, வேடிக்கையாய் வெளியிடும் புகைப்படங்களும், விமர்சனங்களும்கூட கணவன்-மனைவி இடையே மனக்கசப்பை வளர்த்து, விவாகரத்து வரை கொண்டுபோய்விடுகிறது.

அமெரிக்காவில் 20 சதவீத விவாகரத்திற்கு சமூக வலைத்தளங்கள் காரணமாக இருக்கின்றன என்று ஒரு புள்ளிவிவரம் கூறுகிறது. அதாவது 5 விவாகரத்துகளில் ஒன்று சமூக வலைத்தள பிரச்சினையால் உருவானதாக அறியப்படுகிறது. இந்தியாவில் இதுபோன்ற புள்ளிவிவரங்கள் வெளியாவதில்லை என்றாலும், கணக்கெடுப்பு நடத்தினால் இந்திய விவாகரத்து சதவீதம் இதையும் மிஞ்சும் என்று கூறலாம்.

ஏனெனில் இங்கு சமூக வலைத்தளம் பயன்படுத்துபவர்களில் பெரும்பாலானவர்கள் பாதுகாப்பு வழிமுறைகளை கையாளத் தெரியாதவர்களாக இருக்கிறார்கள். எவை, எவை அச்சுறுத்தலாக மாறும் என்பது பற்றிய விழிப்புணர்வு இல்லாமல் சகஜமாக, விதவிதமான போட்டோக்களை வெளியிடுவதை வாடிக்கையாக வைத்திருக்கிறார்கள். செல்போன் எண்கள், உண்மையான முகவரி முதல் தங்களது தனிப்பட்ட விவரங்கள் அனைத்தையும் குறிப்பிட்டு பதிவிடுகிறவர்களும் உண்டு. எல்லோரும் தொடர்புகொள்ளும் விதத்தில் இணைய பக்கத்தை வைத்திருப்பவர்கள் தங்களை அறியாமலே சிக்கலில் மாட்டிக் கொள்கிறார்கள்.

சமூக வலைத்தளங்களில் அறிமுகம் இல்லாதவர்கள் நுழைவார்கள் என்ற விழிப்புணர்வு கொண்ட பெண்கள்கூட, வாட்ஸ் ஆப் வலைத்தளத்தில் மாட்டிக் கொள்கிறார்கள். நமக்கு அறிமுகமுள்ள, நம்மை அறிந்தவர்கள்தானே நமது வாட்ஸ் ஆப் தொடர்பில் இருக்கிறார்கள் என்ற எண்ணத்தில் விதவிதமான புகைப்படங்களை வெளியிட்டு பிரச்சினையை வரவழைத்துக் கொள்கிறார்கள். புகைப்படங்கள் நண்பர் மூலமாகவோ, பகிர்தல் மூலமாகவோ, குழு மூலமாகவோ மற்றவர்களுக்குச் செல்கிறது என்பதை அவர்கள் உணர்வதில்லை.

சமூக இணையதளங்கள் வந்ததில் இருந்து அறிமுகமில்லாத புதிய நட்பால் கற்பை இழந்தவர்கள், நகை, பணம் இழந்தவர்கள், மானபங்கப்படுத்தப்பட்டவர்கள் என உலகம் முழுக்க பாதிக்கப்பட்டவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். பலர் மேலும் அசிங்கப்பட வேண்டியிருக்கும் என்று கருதி காவல் நிலையம் செல்லாமல், வலைத்தள கணக்கை மூடிவிட்டு, செல்போன் எண்களை மாற்றிக்கொள்வதும் அதிகரித்து வருகிறது.

விவாகரத்திற்கு வழிவகுத்த தகவல் பரிமாற்றங்கள் நிகழ்ந்த சமூக வலைத்தளங்கள் எவை என்பது பற்றி அமெரிக்காவில் ஒரு புள்ளிவிவரம் சேகரிக்கப்பட்டது. அதில் 66 சதவீதம் பேர் பேஸ்புக்கை குறிப்பிட்டுள்ளனர். மை ஸ்பேஸ் தளம் 15 சதவீதமும், டுவிட்டர் 5 சதவீதமும் பாதிப்புக்கு துணையிருந்ததாக விவாகரத்திற்கு விண்ணப்பித்தவர்கள் கூறி உள்ளனர்.

மனைவி படுக்கை அறைக்கு வந்தபிறகு, கணவர் தன்னுடைய நண்பர்களுடன் நீண்ட நேரம் செல்போனில் சமூகவலைத்தளம் வழியாக உரையாடுவது மனைவிமார்களை ஆத்திரப்பட வைத்திருக்கிறது. அதே நேரம் மனைவி தனது நெருங்கிய வட்டத்துடன் சமூகவலைத்தளங்களில் உறவாடும்போது, கணவர் இன்னும் ஆக்ரோஷம் காட்டுவதும், சந்தேகம் அடைவதும் அதிகரித்து பிரச்சினைக்கு வழிவகுத்துவிடுகிறது.

வாட்ஸ் ஆப் வலைத்தளம் வந்தபிறகு இந்த பிரிவுகளும், உறவு மோதல்களும் பெருமளவு அதிகரித்திருக்கின்றன. இந்த தளத்தில் ஒருவர் எப்போது செய்தியை பார்த்தார் என்பதை அறிய முடியும் என்பதால் அன்புக்குரியவர், தான் அனுப்பிய தகவலைப் பார்த்தாரா, பார்க்கவில்லையா என்பதை கணித்து அதையும் பிரச்சினையாக்கிவிடுகிறார்கள். 'ஆன்லைனில் இருந்துகொண்டு தன் கேள்விக்கு பதில் அளிக்காமல் இருக்கிறாரே, நீண்ட நேரம் யாருடன் உரையாடிக் கொண்டிருப்பார்?' என்பது போன்ற கேள்விகளும், சிந்தனைகளும் நிறைய குடும்பங்களில் சந்தேக விதைகளைத் தூவுகின்றன.

கடைசியாக எப்போது வாட்ஸ் ஆப்பை திறந்தார் என்ற நேரத்தை கணிக்க முடிவதால், இரவு வெகுநேரம் கழித்து இணையத்தை திறக்கும் கணவர் மனைவியிடமும், மனைவி கணவரிடமும் மாட்டிக் கொண்டு முழிக்கும் சூழலை உருவாக்குகிறது. நாம் தூங்கிய பிறகு யாரிடம் உரையாடினார், என்ன பேசியிருப்பார் என்பதை அறிந்து கொள்ளும் ஆர்வமும், சந்தேகமும் பிரச்சினைக்கு அடித்தளமிடுகிறது.

நண்பர்கள், தோழிகள், காதலிகளின் புகைப்படத்தை ஸ்டேட்டஸாக வைத்தாலோ அல்லது பாராட்டி எழுதினாலோ அதை தவறாக புரிந்து கொண்டு அவருக்கும், இவருக்கும் என்ன உறவு? என்ற சந்தேக கண்ணோட்டத்துடன் சிலர் பின்தொடர தொடங்குகிறார்கள். அது மோசமான பின்விளைவுகளை உருவாக்குகிறது. பிறந்த நாள் கொண்டாட்டம், சுற்றுலா சென்றது, விழாக்களில் பங்கேற்றது போன்ற மகிழ்ச்சியான தருணங்களை புகைப்படங்களாக வெளியிடுவதை இன்று பலரும் விரும்புகிறார்கள். ஆனால் அதுவும் பிற்காலத்தில் பிரச்சினையாக மாறும் என்பதை அவர்கள் உணர்வதில்லை.

விழாவில் தோழியுடன் எடுத்த படத்தைக் காட்டி அவள் யார்? என்று விசாரிக்கும் மனைவிமார்கள் உண்டு. அடுத்து அவளை எப்போதெல்லாம் சந்திக்கிறார் என்பதை அறிந்து கொள்ள ஆவல் காட்டுவார்கள், அல்லது அதையே சந்தேக நோக்குடன் பார்ப்பார்கள். அடுத்து அலுவலக மீட்டிங் என்றோ, விழா என்றோ கூறினால் அந்த தோழியும் இடம்பெறுவாளா என்று நோட்டமிடுவார்கள். இது கணவன், மனைவி இருவருக்கும் பொருந்தும்.

கணவரின் பேஸ்புக், டுவிட்டர் பாஸ்வேர்டுகள் தங்களுக்கும் தெரியவேண்டும் என்று விரும்பும் பெண்கள் நிறைய பேர் உள்ளனர். அதிலும் இணையதள பிரச்சினைகளை அறிந்தவர்கள் கணவ்ரின் கணக்கையே தனது கணக்காக் பயன்படுத்துவதும் உண்டு. அப்படியிருக்கும்போது நண்பன் என நினைத்து அவருடைய மனைவியிடம் உறவாடும் ஆண் நண்பர்கள், ரகசியங்களை பகிர்ந்து கொண்டு சிக்கலை கிளப்பியிருக்கிறார்கள். மனைவியின் தோழிகளுடன் நட்பு பாராட்டி, அதனால் மனைவியின் கோபத்துக்கு ஆளான ஆண்களும் இருக்கிறார்கள்.

வலைத்தளங்களில் ஞாபகப்படுத்தும் விதமாக பழைய புகைப்படங்களையெல்லாம்



அள்ளிக் கொண்டுவந்து காண்பிக்கும் வசதி உண்டு. அப்போது பழைய தோழிகள், பழைய ஆண் நண்பர்களைப் பற்றிய புகைப்படத்தை கணவரோ, மனைவியோ பார்க்கும் சூழல் ஏற்பட்டதால், சிலரது வாழ்க்கையில் பிரச்சினைகள் ஏற்பட்டிருக்கின்றன. தற்கால விவாகரத்து வழக்குகளின்போது வாட்ஸ் ஆப் மெசேஜ்கள், வலைத்தள புகைப்படங்கள் ஆதாரங்களாக சமர்ப்பிக்கப்படுகின்றன. விவாகரத்து வழக்கில் ஜீவனாம்சம் கேட்ட பெண்கள், விவாகரத்திற்குப் பிறகு, கணவர் சுற்றுலா சென்றது, கொண்டாட்டங்களில் கலந்துகொண்டதுபற்றியபுகைப்படங்களைக் காட்டி, அதிக சம்பாத்தியம் இருப்பதாக கூறி ஜீவனாம்சத்திற்கும், குழந்தை பராமரிப்பிற்கும் கூடுதல் தொகை கேட்ட முறையீடுகளும் நிகழ்ந்துள்ளன.

குழந்தைகளை தாங்கள்தான் பராமரிப்போம் என்று கூறி குழந்தையை தன்வசம் வைத்துக் கொண்ட தாய், வேலைக்குச் சென்று தாமதமாக வருவதையும், பார்ட்டிகளில் கலந்து கொண்டதையும், அப்போது மற்றவர்களுடன் சேர்ந்திருப்பதையும் வலைத்தளங்களில் அறிந்து கொண்டு, அவற்றை காரணம் காட்டி, குழந்தை மீது அதிக அக்கறை காட்டாதவர் என்று கூறி குழந்தையை தன்னுடன் அழைத்துச் செல்ல அனுமதி கேட்டும் மேலைநாடுகளில் வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

எனவே சாதாரண விஷயங்களும், சமூக வலைத்தளங்களால் பிரச்சினைக்குரியதாக மாறும் அபாயம் நிறைய உண்டு. எனவே திருமணத்திற்கு முன்பும் சரி, பின்பும் சரி, விவாகரத்து ஆனாலும் சரி, இணையதளம் என்றால் எச்சரிக்கை அவசியம். இல்லாவிட்டால் உங்கள் வாழ்க்கை மற்றவர் ரசிக்கும் வேடிக்கைக் களமாக மாறிவிடும்.

**தொடரும்...**








# OFFERS EXCEPTOINAL DISCOUNTS FOR

# IBC தமிழா

— TORONTO 2019 —

## SERVICES



### High Speed Internet

Experience the Internet in a completely different way with the leaders in the industry.



### Business Internet

We have the business specialists, expertise and resources to help you.



### Home Phone

With 17 Standard Calling features, our VOIP Home phone plans let you call anywhere in North America



### Cyber Security

- Bot Management • Web Application Firewall
- DDoS Protection - 24/7 • Threat Response



### Long Distance

Providing affordable long distance rates for you and your family, because we understand the value of staying connected.



### Web Hosting

Dominating the industry, our platform provides 99.9% uptime guarantee & 24/7 technical support.

**20% DISCOUNT** ON REGULAR TICKETS FOR EXISTING CLIENTS

**50% DISCOUNT** ON VIP TICKETS FOR NEW CUSTOMERS

**416-477-8181**
**WWW.TNEXT.CA**

PICKUP LOCATION 1
**TNEXT OFFICE**
155 Rexdale Blvd #502A, Etobicoke, ON M9W 5Z8

IBC தமிழ்

PICKUP LOCATION 2
**ANNAM JEWELLERS**
208 Markham Rd, Scarbrough, ON M1J 3C2



# ஊடகவியலாளர் "நாட்டுப்பற்றாளர்" ஐ.நடேசன் 15ஆம் ஆண்டு நினைவுகள்

யாழ்ப்பாணம் நெல்லியடியில் பிறந்து வாழ்ந்து பின்னர் மட்டக்களப்பில் மணம்முடித்து அங்கேயே வசித்து வந்த முன்னணி ஊடகவியலாளர் ஐ.நடேசன் அவர்களின் உயிர் அவர் வாழ்ந்து வந்த மட்டக்களப்பு மண்ணில் வைத்து 2004 மே 31ம் திகதி திங்கட்கிழமை காலை சிறிலங்கா அரச கைக்கூலிகளால் பறிக்கப்பட்டது.

உண்மை உரைத்து ஊடகப்பணி செய்த ஒரே காரணத்துக்காக ஐ.நடேசன் பலியெடுக்கப்பட்டார்.

ஆபத்து உள்ளது என்பதைத் தெரிந்து கொண்டும் அஞ்சாது நின்று பணி செய்தவர் நடேசன் அவர்கள்.

1976-1977-1978 காலகட்டத்தில் யாழ்ப்பாணம் ஸ்ரான்லி வீதியில், நாகவிகாரைக்கு எதிரில் ஐலண்ட் இன்ரிரியூட் என்ற தனியார் கல்வி நிலையத்தை மிக வெற்றிகரமாக இயக்கி வந்தவர்.

அப்போது நண்பர்களானோம். அந்தக்காலகட்டத்தில் எப்பொழுதும் எமது பெஸ்ரோன் ஒலிபரப்பு நிலையத்துக்கு வருகை தருவார். பல்வேறு விடயங்கள் தொடர்பாகப் பேசுவோம்.

யாழ்.பூபாலசிங்கம் புத்தகசாலையிலும் அடிக்கடி அவரைக் காணக்கூடியதாக இருக்கும்.

அன்றைய காலகட்டத்தில் நடேசன் கூறிய ஒரு விடயம் இன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

நாட்டில் ஏற்பட்டுள்ள பணவீக்கம் தொடர்பாக இப்படிச் சொன்னார்.

"ஒரு காலத்தில் நாட்டில் சாக்கில் பணம் கொண்டு சென்று சொப்பிங் பாக்கில் பொருட்கள் வாங்கிவருவோம்" என்றார்.

நடேசனுக்கு ஒலிபரப்புத்துறையில் அப்பொழுதிருந்தே நாட்டம் இருந்தது.

எமது ஒலிபரப்பு நடவடிக்கைகள் குறித்து பல்வேறு விடயங்கள் விவாதிப்போம். பின்னர் அவற்றை நடைமுறைப்படுத்துவோம்.

விளம்பரங்களை 30-40 விநாடிகளுக்குள் மட்டுப்படுத்திக் கொண்டமை அவருடனான ஆலோசனைகளிலிருந்தே நடைமுறைப்படுத்திக் கொண்டமை நினைவுக்கு வருகின்றது.

1982 காலகட்டத்தில் இருவரும் சேர்ந்து இலங்கை ஒலிபரப்புக்கூட்டுத்தாபனத்துக்கு அறிவிப்பாளர் பதவிக்காக விண்ணப்பித்தோம்.

அவர் சேவை ஒன்றுக்கு விண்ணப்பித்தார். நான் சேவை இரண்டுக்கு விண்ணப்பித்தேன்.

கே.எஸ்.ராஜா அவர்களுடன் நல்ல நட்பு அவருக்கு இருந்தது.

1983 ஜூலை கலவரத்தின் பின்னர் திசை மாறிவிட்டோம். 1984 புலப்பெயர்வு.

1997 ஜூன் 9 அன்று ஐபிசி தமிழ் ஆரம்பத்தின் பின்னர் அங்கிருந்து பணியாற்றும்போதே மீண்டும் தொடர்பு ஏற்பட்டது.

நடேசனுடன் பேசும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் கடந்தகால விடயங்கள் பலவற்றை மீட்டுவோம்.

எனது ஒலிபரப்புக்கடமையின் போது காலை வேளையிலும் செய்திகளை அவரது குரலில் பதிவு செய்து கொள்வேன். எது தேவையோ எப்படித் தேவையோ அவற்றை அவ்வாறே தந்துவிடுவார்.

அடுத்த செய்திப்பதிவுக்குரிய நேரத்தையும் காலையிலேயே அறியத்தந்துவிடுவார்.

ஒவ்வொரு நாளும் ஐபிசி தமிழ் வானொலிச் செய்திகள் ஒலிபரப்பாகும் போது மட்டக்களப்பிலிருந்து ஐ.நடேசன் என்றதும் அவரின் குரலில் செய்தி ஒலிக்கும். களம் கண்ட கனதியான செய்தியாளன்.

மிக நுட்பமாகச் செய்திகளைச் செப்பனிட்டு வழங்குவார். கலந்துரையாடல்களிலும் கலந்துகொண்டு ஆணித்தரமாகக் கருத்துக்களை முன்வைப்பார்.

மாமனிதர் ஜோசப் பரராஜசிங்கம் அவர்கள் வீட்டுக்காவலில் வைக்கப்பட்டிருந்த போது, அங்கே திரண்ட மக்களின் கருத்துக்களை மிக நீண்ட நேரம் நேரில் நின்று எமக்கு நெறிப்படுத்தி வழங்கினார்.

இது போன்று அவரது பல்வேறு பணிகளை இன்று நினைத்துப்பார்க்கக் கூடியதாக உள்ளது.

2004 மே 31 திங்கட்கிழமை அன்று காலை நான் கடமையிலிருந்து வழமைபோன்று நடேசனிடம் செய்தி பதிவு செய்வதற்காக அழைப்பை மேற்கொண்டேன்.

மறு முனையிலிருந்து ஐயோ என்ற ஓலம் ஒலித்தது. சற்றும் எதிர்பாராதது. என்ன நடந்தது என்று வினா எழுப்புவதற்கு முன்னதாகவே "சுட்டுப்போட்டாங்கள் உங்கட நடேசன் போயிற்றார்.. ஐயோ.. ஐயோ.." எனக்கதறினார் நடேசனின் மனைவி.

எதுவும் பேச முடியவில்லை. தொலைபேசி வழியாக உரையாடிக்கொள்ளும் வேளைகளில் "மண்டையில் போடுவாங்கள் சோக இசை போட்டு அஞ்சலி செய்யுங்கடாப்பா" என அவர் வேடிக்கையாகப் பேசியது நினைவில் சுழன்றது.

வாழ் நாளில் ஒரு முறை இலண்டன் வந்து ஐபிசி தமிழ் கலையகத்தில் இருந்து பணியாற்ற வேண்டும் என்று விரும்பியவர் நடேசன்.

எல்லாம் முடிந்துவிட்டது. உடனடியாக பணிப்பாளர் சி.சிவரஞ்சித் அவர்களின் கவனத்துக்குக் கொண்டு சென்றேன்.

நடேசன் சொன்னது போலவே நடந்தது. சோக இசையுடன் அவரை அஞ்சலித்தோம். எமது உறவுகள் அனைவரும் வானலையில் நடேசனுக்கு அஞ்சலி செலுத்தினர்.

ஐபிசி தமிழ் வானொலியில் பணியில் இருக்கும் போது மீண்டும் தொடர்ந்த நட்பு அங்கே பணியில் இருக்கும் போதே விடைபெற்றுவிட்டது. வீறிட்டு அழுதிடத்தூண்டிய போதும் வானொலி



நிலையக் கடமை கட்டுப்படுத்திக்கொள்ள வைத்தது.

எஸ்.கே.ராஜென்

நண்பர் என்பதற்கு அப்பால் நாட்டின் நல்லதோர் ஊடகவியலாளனாக தனது பணியை நேர்மையுடன் புரிந்துவந்தவர்.

தனக்கான உயிர் ஆபத்தைத் தெரிந்திருந்தும் எங்கேயும் ஓடி ஒழியாமல் தனது மண்ணிலிருந்து மக்களுடன் சேர்ந்து ஊடகப்பணியாற்றியவர்.

ஈழத்தமிழ் மக்களால் என்றும் மறக்க முடியாத ஓர் உன்னதமான ஊடகவியலாளன் ஐ.நடேசன். அவர் நினைவுகள் என்றென்றும் நிலைத்திருக்கும்.

---

# என்று தணியும் இந்த நீதியின் வேட்கை?

"பெத்த தாயையும், பிறந்த மண்ணையும் நேசிக்க மீசை முளைக்கத் தேவையில்லை" என்பர். அவ்வாறு மீசை அரும்பியதனது 15வது இளம்பருவத்தில் தேச விடுதலைக்கான பயணத்தில் இணைத்துக் கொண்டவர், இன்று அந்தப் பயணம் ஜெனீவா முன்றலில் நிற்கின்றது.

வெண்முடி ஆங்காங்கே அரும்பிய தனது 49வது வயதிலும், நீதிக்காக போராடிக் கொண்டிருக்கின்றார்.

கஜன். மனித உரிமைச்செயற்பாட்டாளர் இவரது அடையாளம். பிரான்சை வசிப்பிடமாக கொண்டவர்.

2009 ஆயுத மோதல்களின் முடிவுக்கு பின்னராக, இறுதிப்போரில் நடந்தேறிய இனப்படுகொலைக்கான பரிகாரநீதிக்கு யாரின் கதவைத் தட்டுவது என்ற கேள்வி.

ஐ.நா மனித உரிமைச்சபையே இதற்கான வாயில்களில் ஒன்றாக இருந்த நிலையில், 2011ம் ஆண்டு பிரான்சில் இருந்து ஜெனிவா-ஐ.நா முன்றல் வரை நீண்டதொரு நடைப்பயணத்தினைத் தொடங்கியவர், இன்று ஐ.நா மனித உரிமைச்சபையின் ஒவ்வொரு கூட்டத் தொடர்களின் போது, தமிழினப்படுகொலையின் சாட்சியங்களாக விளங்கும் ஒளிப்படங்களுடன் முன்றலில் நீதிகோரி நிற்கின்றார்.

ஐ.நா முன்றல் நீதிக்கான உலக ஒடுக்கப்பட்ட மக்களின் குரல்கள் ஒலிக்கின்ற இடம். ஒடுக்கப்பட்ட ஒவ்வொரு இனங்களும் ஒவ்வொரு கூட்டத் தொடர்களின் போது தமக்கான நீதிக்கும், உரிமைகளுக்காகவும் அணிதிரளுகின்ற இடம்.



கஜனின் கண்காட்சிமுன்றலின் ஒருபுறத்தில் அமைந்திருக்க, தமிழினப்படுகொலையினை புரிந்த சிங்கள அரசதரப்பு ஆதரவாளர்களும், அரச பயங்கரவாதத்துக்கு வெள்ளை அடித்துக் கொண்டிருப்பார்கள்.

இதுவே இந்த முன்றலின் முரண்நகை.

2013ம் மார்ச் கூட்டத் தொடரின் போது தொடங்கிய கஜனின் காட்சிப்படுத்தல், இதுவரை தொடர்சியாக 20 தடவை ஐ.நா முன்றலில் வைக்கப்பட்டுள்ளது. தற்போது பிரான்சின் பல்வேறு நகரங்களில் வைக்கப்பட்டு வருகின்றது. சுவிசின் பல நகரங்களிலும் வைக்கப்பட்டுள்ளது.

குளிரும், மழையும், வெயிலும் மட்டுமல்ல பல வேளைகளில் தனிமையும் கஜனோடு இருக்கும். ஒரு வகையில் இது தனியொரு மனிதனின் தொடர்போராட்டமாகவே தோன்றும்.




ஆள்வளமும், நிதி வளமும் தனக்குள்ள பெரும் சவாலென தெரிவிக்கும் கஜனுக்கு மற்றவர்கள் போல் மனைவி, பிள்ளைகள் என்று குடும்பம் உண்டு.

நண்பர்கள், சிலவர்த்தகர்களது உதவியுடன் நீதிக்கான தனது பயணத்துக்கான நிதித்தேவைகளை நிவர்த்தி செய்வதாக குறிப்பிடும் இவர், ஒரு கொடை வள்ளலின் உதவியால் நீதி கோரும் ஒளிப்படங்களை காவிச் செல்வதற்கான ஊர்த்தியை வாங்க முடிந்ததாக குறிப்பிடுகின்றார்.

தமிழினப்படுகொலைக்கான நீதிகோரும் வாசகங்களுடன் வடிவமைக்கப்பட்டுள்ள அந்த ஊர்த்தி ஐ.நா முன்றலை நோக்கிய தனது 21வது பயணத்துக்கு தயாராகிக் கொண்டிருக்கின்றது.

உலக நீதியின் கதவுகள் அத்தனை இலகுவில் திறப்பதில்லை. காரணம் பூட்டப்பட்டிருக்கும் கதவுகளின் திறப்புக்களை வல்லாதிக்க அரசுகள் தமது பொக்கெற்றுகளுக்குள் வைத்திருக்கின்றன. தேவை வரும் போது மட்டும் திறப்பார்கள். அவ்வாறு தமக்கான நீதியின் கதவுகள் திறக்கும் என காத்திருந்து கரைந்து போகாமல், ஓயாது ஈழத்தமிழர்கள் போராடிக் கொண்டிருக்கின்றார்கள்.

அப்போராட்டத்தின் ஒரு வடிவமாக கஜன் காட்சிப்படுத்தலும் அமைகின்றது.

போரே வாழ்வாகி, வாழ்வே போராகிக் போன ஈழத்தமிழ் மக்களின் சாட்சியங்களாகவும் இவைகள் அமைகின்றன.



## இத்தனை வருடமாக நடத்தும் இந்த கண்காட்சியில் உங்களுக்கு மறக்க முடியாத அனுபவம் என்று ஏதாவது இருக்கின்றதா?



நிறையவே உண்டு. நான் காட்சிப்படுத்தும் புகைப்படங்களில் படுகொலை செய்யப்பட்டவர்களின் உறவினர்கள் இங்கு வந்து அதை காணும் போது ஏற்படும் உணர்வுகள் நெஞ்சை உருக்கவைக்கும். உதாரணமாக நாட்டுப்பற்றாளர் ஊடகவியலாளர் சத்தியமூர்த்தி தேவிபுரத்தில் 2009ல் கொல்லப்பட்டார். அப்பொழுது அவருடைய உடலின் அருகில் இருந்து அவரது இரண்டரை வயது மகள் சத்தியமூர்த்திக்கு ஒரு இறுதி முத்தத்தை இடுகின்ற புகைப்படத்தை இங்கே நான் வைத்திருந்தேன். பின்பு புலம்பெயர்ந்து சத்தியமூர்த்தியின் மனைவியும் மகளும் வாழ்ந்து வந்த நிலையில் மகளுக்கு ஏழுவயதான போது இந்த புகைப்படங்களை பார்க்க வந்தனர். தன்னுடைய தந்தைக்கு தான் இரண்டரை வயதில் போருக்குள் தேவிபுரத்தில் முத்தம் கொடுக்கும் புகைப்படத்தை கண்டு ஆச்சரியத்திலும் சொல்லமுடியாத ஒரு உணர்விலும் உறைந்து போனார். பின் அந்த புகைப்படத்திற்கு ஒரு முத்தத்தையும் இட்டார் அதுவும் ஒரு புகைப்படமாகி ஊடகங்களில் வெளிவந்தது. இதுபோன்ற நெஞ்சை பிழியும் அனுபவங்கள் எனக்கு நடந்திருக்கின்றன.

# இன்னொரு புது வசந்தம்

சயனச்சோம்பல் முறித்துச் சாளரம்
திறக்கையில்
வானொலியின்று வசந்தத்தின் முதல்
நாளென்றது
குளிர்த்தவம் குலைத்த மரங்களின்
குறில் நெடில்
கிளைகளில் வசந்தமும் முகிழ்த்தது.

மரம் வதியும் வசந்தங்கள் எத்தனை
மனம் வதித்தன
மனம் வதியும் வசந்தங்கள் எத்தனை
மரம் வதித்தன
என் பற்றிய இந்த மரங்களின்
சிந்தனைகளுக்கான
பாதையேதும் எனக்கு ஒருபோதும்
அறிவிக்கப்படவில்லை.

மானிட வேரும் மரவேரும் கொள்ளும்
மர்மச் சந்திப்புகள் பற்றிய
மொழிகள் இன்னமும் இலக்கணம்
கொள்ளவில்லை
நிலைத்தலின்றியும் நிலமின்றியும் வேர்
கொள்ளலும்
நடந்து கொண்டேயிருக்கிறது.

உயிர் புதிர்க்கும் பருவத்தில் உடல்
முறுகும்
ஒலி கேட்டுப் பிறக்கின்ற பாடல்களில்
பிணைகின்ற பெருவிருப்பின் பலம்
கண்டு
அழைப்புவரும் அழைப்புவரும்
அழைப்பேவரும்.

காருறு கண்ணியர் ஐம்புலன்
ஆற்றங்கரை மரமாய்
வேருறு மனங்கொள்ளலும்
வேர்கொள்ளலே
சூரியப் பேருயிர் சூழன்றாடும்
சூட்சுமத்துள்
தூசியாய் அலைதலும் வேர்கொள்ளலே.

ஏகாந்தம் ஏந்தி வரும்
இசையாற்றங்கரையில்
இருளறுந்து விழித்திருந்து மருளறுந்து
மறுபடியும் நித்தியத்துள் பிறப்பதுவே
பிறப்பு
இன்றும் பிறந்தது எனக்காக மட்டும்
இன்னொரு புதுவசந்தம்.

இதுவே இறுதி யென்றால் அவ்வாறே
யாகட்டும் தொடக்கமிலை, முடிவுமிலை,
இடையிலொரு வெளியுமிலை
எல்லாமே எங்கும் எப்போதுக்குமாக.

*- வாசுதேவன்*

# என்தேசம்

எரிந்து முறிந்து
விழுகிறது என் தேசம்
“என் தேசம்”
என்பதில் என்ன தப்பு?

வாய்க்கரிசி போட்ட மண்ணிலிருந்து
வாழ்வு தேடி வந்தவன்.

அதற்காக அழுவதில்
எனக்கொன்றும் வெட்கமில்லை

பகட்டான வாழ்வில்லை
இன்றும்
பரதேசி வாழ்வுதான்.

அகதி தான்
ஆனாலும்
அழுகிறேன்.

இந்த மொழி கூட
இன்னமும்
ஆழமாய் பேசமாட்டேன்

சரிந்து வீழ்ந்த போதும்
ஐயோ என்றே கத்தினேன்

ஒருத்தன்
அழிந்த உன் தேசம் மறந்து
அடுத்தவன் ஊருக்காய் ஏனடா
அழுகிறாய்?

என்றான்
அடித்து விரட்டியவனை விட
அடைக்கலம் தந்தவனோடு

அழுவதில் தப்பில்லையே.
வேண்டாம் வியாக்கியானம்

எரிந்தது கோயில் அல்ல
எனக்கு வாழ்வு தந்த தேசம்.

ஆறடி மண்ணையும்
அவர்கள் தான் தரவேண்டும்

என்னை அழ விடுங்கள்
இந்த கண்ணீர்

என் தேசத்திற்கானது...
வாக்குரிமையை விட
வாழ்வுரிமையே
கண்ணீரை வரவழைக்கும்.

*- சத்தியன்*




உங்கள் ஆக்கங்களும்
கவிப்பூங்காவில்இடம்பெற,
உங்கள் கவிதைகளை
press@ibctamil.com
என்னும் மின்னஞ்சலுக்கு
உங்கள் விபரங்களுடன்
அனுப்பிவையுங்கள்

தொகுப்பு : எஸ்.கே.ஆர்.




இன்று
முக நூல்
முற்றத்தில்
பலரது
நிழல் படம்.
சிலரது நிஜப் படம்.

ஆனாலும்
என் இதய
தடாகத்தில்
ஆவணமானது
அம்மா உன்
உயிர் தடம்.

நீ
காட்டிய அன்புக்கு
நீயே என்றும்
நிறை குடம்.

அறியாத
பலருக்கு நான்
வெறும் ஜடம்.
ஆனாலும்
புடம் போட்ட
நீயே என் திடம்.

உன் தனித்துவம்
அறிந்தவன்
நான் என்பதில்
பெருமிதம்.
ஊட்டிய
வேளையிலும்
நடிப்பில்லா
வார்த்தைகளே
இன்றும் பாடங்கள்.

இடம்
கண்ட இடங்களில்
கபடங்களால்
நிலையில்லா
மடம் கட்டுவார்
வரிக்கு வரி
கலக்கின்றார்
விசித்திர விடம்.

வினாடிக்கு
வினாடி
விழுத்திடவே
வெட்டுவார்
பொறிக் கிடங்கு
விழிப்புடன்
இருத்தலே நம்
கடன்..

உனக்கானதே
வாழ்க்கை
உனக்காகவே
வாழு.உன்னோடு
இணைத்து
முடிந்தவரை
அடுத்தவனையும்
வாழ வைத்திடு...

*- தயாநிதி*

# நெஞ்சம் மறக்குமா எம் மண்ணின் அவலத்தை

கந்தக நெடி கலந்த காற்றுத்தான்
காடு, களப்பு, கடல் என்று
வியாபித்திருகிறது....
பச்சை இரத்தத்தின் வாடை இன்னும்
மண்ணைவிட்டு மாறவில்லை..
ஆறாக ஓடிய குருதி
ஆங்காங்கே முட்டி மோதி
திட்டுத் திட்டாக தேங்கி நிற்கிறது
மரணங்களின் வன்மம் எங்கும்பரவி ஒரு
மயானத்தை நினைவு படுத்துகிறது
பேயாடிப் பந்தல் பிரித்துக் கிடப்பதுபோல்
கண்ணுக் கெட்டிய தூரமெல்லாம்
காட்சியளிக்கிறது
ஓநாய்கள், நரிகள், ஊழையிடும் சத்தம்
ஓயாமல் கேட்கிறது...
மரங்களின் கிளைகளில்
மனித உடற்கூறுகள் தொங்குகின்றன
கண்கள் பிதுங்கி கழுத்து முறிந்து
கால்கள் சிதைந்து செங்குருதி காய்ந்த
உடல்கள்
பனைவடலிப் பக்கம் பரவிக்
கிடக்கின்றன
கழுகுகளும், பருந்துகளும் அடுத்த சுற்று
உணவுக்காக
வான்பரப்பில் வட்டமடிகின்றன.
கோட்டான்கள் எழுப்பும் சத்தம்
கொடூரமாக கேட்கிறது
கனரக ஆயுதங்களின் கடுமையான
தாக்குதல்களில்
சிதைந்து சின்னாபின்னமாகிப் போன
மக்களின்
உயிர்களும், உடமைகளும்
பார்ப்பாரும் கேட்பாருமற்று கிடப்பில்
கிடக்கின்றன.
முள்ளுக்கம்பி வதை முகாம்களில்
முடமாகிப் போன முதியவர்களின்
முனகல் கேட்கிறது...
போர்முடிந்ததா போசனம் கிடைக்குமா
என்று
மனநலம் குன்றிய மக்கள்
அடிக்கடி பிதற்றுகிறார்கள் ..
சரணடைந்தவர்கள்
தண்டிக்கப்படுகிறார்கள் ..
உடனிருந்தவர்கள் உதைபடுகிறார்கள்...
கன்னிப் பெண்களின் கற்பு
பறிபோகிறது...
குடும்பப் பெண்கள் வல்லுறவுக்கு
ஆளாகிறார்கள்
உலக வரலாற்றின் இனப்
படுகொலைகளின்
உச்சக்கட்டம் நடைபெறுகிறது.......
மேற்குலக நாடுகள் வேடிக்கை
பார்க்கிறது..
ஐ நா செயலர் விருந்தாளியாக சென்று
திரும்புகிறார்.
கனரக ஆயுதங்கள் பாவித்த தடயங்களே
இல்லை என்கிறார்.
உலகின் பாராமுகத்தின் மாபெரும்
மனிதப் பேரவலம் நடைபெறுகிறது.
தர்மத்தின் வாழ்வுதனை சூது கௌவும்
தர்மம் மீண்டும் தலை தூக்கும்
கனத்த இதயத்துடன் புலம் பெயர்ந்த
உறவுகள்
புழுங்கிப் போய் இருக்கிறார்கள்.
இளையோர்களின் தொடர்
போராட்டங்கள் உலகை உசுப்பட்டும்.

# முள்ளிவாய்க்கால்..

முள்ளிவாய்க்காலோடு பொறி கொண்ட
விடுதலையை ஊதிப்பெரிதாக்கு - எங்கள்
வீரர்க்கு இறப்பே இல்லை
கொடிய நீண்ட இரவின் பிறப்பில்
எலும்பும் சதையுமாக
எரிந்து கொண்டிருந்தது
முள்ளிவாய்க்கால்.
கனவுகள் உடைந்து
கல்லறைக்குள் ஒளித்துக்கொண்டது
இரத்தமும் சதையுமாய்
எழுப்பிய சுவருக்குள்
எங்கள் முகங்கள் எரிந்துகருகின...
முள்ளிவாய்க்காலில் சாவின் வாயில்
அகலத்திறந்தே இருந்தது
செத்தவனின் உடலைத் தூக்கச்
சென்றவர்கள் செத்தார்கள்
கொத்துக் கொத்தாகச் செத்தார்கள்
வீதிகள் தறப்பாள் வீடுகள் எங்கும்
பிணக்குவியல்கள் நிறைந்திருந்தன!
காக்கையும் குருவியும்
கரைந்தபடி திரிய
நாறிக் கிடந்தன பிணங்கள்
நாங்கள் மனிதரில்லை என்றே
மூடிக் கிடக்கிறது முள்ளிவாய்க்கால்
புத்தரின் காவியினால்.
காயப்பட்டவர் கிடந்து முனகிய
கொட்டிலின் கட்டிலில்
கொத்துக் குண்டு விழுந்து வெடித்ததை..
நேசித்த உறவெல்லாம் ஒவ்வொன்றாய்
சாக
யாசித்து யாசித்து வான்பார்த்து அழுததை..
யுத்தம் குடித்து சிந்தியரத்தம்
வெள்ளை மண் மீது ஊறிக்கிடந்ததை..
கண்ணீர் வழிந்த கன்னத் தசைகளில்
கையால் தொட்டு உப்புச் சுவைத்ததை..
மறக்கமுடியுமா? மறைக்கமுடியுமா?
பஞ்சமும் பசியும் நிறைந்த ஊண், உறக்கம்
அற்ற
நரக வாழ்க்கை தான் நிறைந்தது!
பிணக்குவியல்களுக்குள் இருந்து
குற்றுயிரும் குறை உயிருமாக தப்பியவர்கள்
நீண்ட வரிசையில் அடுக்கப்பட்டு
சிறைப் பிடிக்கப்பட்டு, அடிமையாக்கப்பட்டு
முள்வேலிகளுக்குள்
அடைக்கப்பட்டார்கள்!
முள்ளிவாய்க்காலோடு முடக்கிக்
கிடந்த தமிழினம்
முழு மூச்சோடு நிமிர்ந்து
நிற்கிறது
இனிமேலும் எவனும்
கிட்ட நெருங்கி எம்மை அடக்க
நினைப்பானா என்ன?
இன்று துரோகிகள்
ஓடி ஒளிக்கின்றனர்
முப்பது நாடும் ஒன்றாய்
செய்த தவறை மறைக்க தமிழனுக்கு
தீர்வு கொடுப்பது போல் நடிக்கிறன
நாட்களை நகர்த்தியபடி.
பூனையின்
பிணத்தைக் காட்டி



‘புலியைக் கொன்று விட்டோம்’
என்னும்
ஓநாய்களின் கூச்சலை
ஒதுக்கி விட்டுக் கேள்
புலியின் உறுமல் கேட்கும்!
தாயக விடுதலையை
உயிர் மூச்சாய் கொண்டவர்கள்
தமிழீழ தேசமெங்கும்
விதையாய் கிடக்கின்றார்..
எழு!
விவேகத்தைத் துணை கொள்
பொறி கொண்ட விடுதலையை
ஊதிப் பெரிதாக்கு
உலகம் எம் பக்கம்
உண்மையும் எம்பக்கம்
எங்கள் எல்லை நீக்கி
உங்கள் படைகள்
ஓடும் வரை
எங்கள் வீரர்க்கு
இறப்பே இல்லை..

*- ஈழத்துநிலவன்*




PROUDLY PRESENTS

# IBC தமிழா
## TORONTO 2019

POWERED BY
IDEAL VENTURES

# Scotiabank Arena விற்கு செல்லும் வழிமுறைகள்

IBC தமிழா Toronto 2019 நிகழ்வில் கலந்து கொள்ள Scotiabank Arena வை வந்தடைய பல வழிமுறைகள் உள்ளன.

**1. சொந்த வாகனங்களில் வருபவர்கள்** – Scotiabank Arena வைச் சூழ கட்டணம் செலுத்தும் வாகனத் தரிப்பிட வசதி போதுமான அளவு உள்ளது. வாகனத் தரிப்பிடங்களை முன்கூட்டியே www.parking.com தளத்தில் பதிவு செய்ய முடியும்.

**Scotiabank Arena முகவரி: 40 Bay Street, Toronto**

**2. TTC SUBWAY** – டொரான்டோ சுரங்கப் பாதையைப் பாவித்தால் நீங்கள் இறங்க வேண்டிய இடம் **Union Station** ஆகும். யூனியன் நிலையத்திலிருந்து சுரங்கப் பாதையூடாக நேரடியாகவே Scotiabank Arena **Gate 1** ஐ சில நிமிடங்களில் நடந்து சென்றடைய முடியும். சனிக்கிழமை தொடர்ச்சியான சுரங்கப் பாதை சேவையுள்ளது.

**3. GO TRANSIT** – பேருந்து மற்றும் புகையிரத நேர அட்டவணையை நீங்கள் www.gotansit.com இணையத் தளத்தில் பார்க்க முடியும். நாள் முழுவதும் GO பேருந்து மற்றும் GO புகையிரத சேவைகள் உள்ளன.

# இலவச போக்குவரத்து சேவை

தெரிவு செய்யப்பட்ட இடங்களில் இருந்து இலவச பேருந்துகள் ஒழுங்கு செய்யப்படும். IBC தமிழா Toronto 2019 நுழைவுச்சீட்டு வைத்திருப்பவர்கள் இம் மாதம் **26ம்** திகதிக்கு முன்னர் **416.477.2550** என்ற இலக்கத்திற்கு தொடர்பு கொண்டு உங்கள் இருக்கைகளை உறுதி செய்யலாம்.







## SHUTTLE BUS PICK-UP LOCATIONS

1. **Square One** – Mississauga
2. **New Spiceland Parking Lot** – Markham & Steeles
3. **Aaniin Community Centre** – Markham & 14th (Next to Vanni Street)
4. **Global Kingdom Ministries** – Markham & Progress
5. **Centennial Community Centre** – Markham & Ellesmere
6. **Yorkdale Mall** – North York
7. **Shopper's World Parking Lot** – Brampton
8. **Gore Meadows Community Centre & Library** – Brampton

**FOR OTHER LOCATIONS, PLEASE CALL**

**416.477.2550**